# THE LAST SEVEN VALLALS

By

K. M. CHINNAPPA PILLAI

*Head Tamil Pandit*

*"Chintadripet High School" Madras.*

APPROVED BY THE TEXT BOOK COMMITTEE.

*(Vide Fort St. George Gazette, Page 616, Dated 11th Nov. 1930).*

PUBLISHED BY

P. N. CHIDAMBARA MUDALIAR BROS.,

MADRAS & MADURA.

 1930 [Price As. 10

# கடையெழு வள்ளல்கள்

## சரித்திரம்

இது,
சென்னை, சிந்தாதிரிப்பேட்டை
உயர்தரக் கல்விக் கழகத் தமிழ்ப் பிரதம பண்டிதரும்,
தலையெழு, இடையெழு, வள்ளல்கள் சரித்திர ஆசிரியருமாகிய;
திருவாளர்,
கா. மு. சின்னப்பாபிள்ளை அவர்களால்
எழுதப்பட்டது.

இதனை வெளியிட்டோர்,
பி. நா. சிதம்பர முதலியார் பிரதர்ஸ்
சென்னை & மதுரை

 1930 [விலை அணா 10.

## இந்நூலைப்பற்றி
## தமிழறிஞர் சிலர் அளித்த அபிப்பிராயங்கள்.

---

### C. R. Namasivaya Mudaliar, M. R. A. S.

*Lecturer in Tamil, Presidency College; Chairman, Board of Studies in Tamil, University of Madras.*

கடையெழு வள்ளல்கள் என்னும் இவ் வுரைநடை நூலைச் சிற்சில இடங்களில் படித்துப் பார்த்தேன். இது தெள்ளிய நடையில் குற்றமின்றி இயன்றிருக்கின்றது; வள்ளல்கள், புலவர் முதலியோரைப் போற்றிப் பாதுகாத்து வந்த செய்தி நன்கு விளக்கப்பெற்றிருக்கிறது. புலவர்கள் அவ் வள்ளல்களைப் புகழ்ந்து பாராட்டிய செய்யுட்கள் ஆங்காங்கே உரிய விடத்தில் உரையுடனே இதன்கண் குறிக்கப்பட்டுள்ளன.

இது, பாடசாலை மாணவர்கட்குப் பெரிதும் பயன்படுவதாகும். என் நண்பர் கா. மு. சின்னப்பா பிள்ளை அவர்கள் இதுபோன்ற நூல் வரிசைகள் இன்னும் பல எழுதித் தமிழ் உலகத்துக்கு நன்மை புரிவாராக.

கடலகம்
24—9—1930. (Sd.) கா நமச்சிவாயன்.

Mahamahopadyaya
**V. SWAMINATHAIYAR,**

"*Tyagaraja Vilas*"
*Tiruvetteswaranpet, Madras.*
17—9—1930.

சிந்தாதிரிப்பேட்டை ஹைஸ்கூல் தமிழ்ப் பண்டிதராகிய கா. மு. சின்னப்பா பிள்ளை எழுதிப் பதிப்பித்த, 'கடையெழு வள்ளல்கள் சரித்திரம்' என்னும் புத்தகத்திற் சில பாகத்தைப் பார்த்தேன்.

இத் தமிழ் நாட்டில் முன்பு புகழ்பெற்று விளங்கிய அதிகமான் முதலிய எழு வள்ளல்களுடைய சரித்திரங்களைப் பற்றி இப்பொழுது கிடைக்கும் குறிப்புக்களை யெல்லாம் பார்த்துத் தொகுத்து இயற்றியிருப்பதாகத் தெரிதலின், அந்த வள்ளல்களுடைய சரித்திரத்தைத் தெரிந்துகொள்ள வேண்டுபவர்களுக்கு இஃது உதவியாக இருக்கும். தமிழ்ப் பாஷையில் அன்புள்ளவர்கள் ஓய்வு நேரங்களில் இப்புத்தகத்தைப் படிப்பார்களாயின் மேற்கூறிய வள்ளல்களின் உயர்ந்த குண விசேடங்களை அறிந்து தாம் கைக்கொண்டு ஒழுகுவதற்கு அநுகூலமாக இருக்குமென் றெண்ணுகிறேன்.

இங்ஙனம்,
(Sd.) வே. சாமிநாதையர்.

MANI. THIRUNAVUKKARASU MUDALIAR,
*Lecturer in Tamil, Pachaiyappa's College,*
*Editor, "Tamil Arasu," Madras.*

21—9—1930.

நம் கெழுதகை நண்பரும் சென்னை சிந்தாதிரிப்பேட்டை உயர்தரக் கல்விக் கழகத் தமிழ்ப் பிரதம பண்டிதருமாகிய திருவாளர் கா. மு. சின்னப்பா பிள்ளை அவர்கள் எழுதிய 'கடையெழு வள்ளல்கள் சரித்திரம்' என்னும் தமிழ் நூலைக் கண்ணுற்றேன். இது கடை வள்ளல் எழுவரையும் பற்றிய எல்லாப் பொருள்களையும் தன்னகத்தே விரிவாகக் கொண்டுளது. இதுவரை வெளிவாராத சில நிகழ்ச்சிகளையும் இதன் கண் காணலாம். இடையிடையே பல பொருள்களை இதன் பால் ஆசிரியர் பொருத்தமாக இணைத்திருக்கிறார். புறநானூற்றுச் செய்யுட்களும் அவற்றின் உரையுடன் ஆங்காங்குச் சேர்க்கப்பட்டுள்ளன. நடை தெளிவாகவும் இனிமையாகவும் அமைந்துளது. சொல்லும் முறையும் சுவையுடையதாகவே உளது. தமிழ் நாட்டுப் பல செய்திகளையும் இந்நூலால் அறியலாம். இது மாணவருக்குப் பெரிதும்பயன்படும் என்பது சொல்லாமலே விளங்கும். இது போன்றே இன்னும் பல அரிய நூல்களை நம் நண்பர் அவர்கள் எழுதி வெளியிட்டுத் தமிழ்த் தொண்டு புரிவாராக.

இங்ஙனம்,
(Sd.) மணி - திருநாவுக்கரசன்.

கா. ர கோவிந்தராஜ முதலியார்,
தமிழ்ப் பிரதம பண்டிதர்
பச்சையப்பன் கல்லூரி,

13, நாட்டுப்பிள்ளையார் கோயில் தெரு,
சென்னை. 28—9—'30

என் அருமை நண்பர் திருவாளர் கா. மு. சின்னப்பா பிள்ளை அவர்கள் எழுதிய "கடையெழு வள்ளல்கள்" என்னும் உரை நடை நூலை நான் படித்துப் பார்த்தேன். இது இளமாணவர்களும் இளமாணவிகளும் எளிதிற் படித்தறிதற்குரிய தெள்ளிய நடையில் அமைந்திருக்கின்றது. இந்நூலிற் கூறப்பட்டவை போன்ற வரலாறுகள், இதிகாசங்கள், புராணங்கள், தேச சரித்திரங்கள் முதலியவற்றிற் கூறப்படும் வரலாறுகள் போல எளிதில் எடுத்து எழுதற்குரியனவல்ல. முத்து எடுப்போர் கடலுள் மூழ்கி முத்துச் சிப்பிகளைக் கொணர்ந்து அவற்றினின்று முத்துக்களை எடுத்துச் சேர்ப்பதுபோல் புறநானூறு, அகநானூறு, நற்றிணை, பதிற்றுப்பத்து முதலிய சங்கத்துத் தொகை நூற்கடலிற் படிந்து, அவற்றுள், அரசர் முதலியோருடைய வரலாற்றின் குறிப்புகள் அமைந்த செய்யுட்களைக்கொண்டு அவற்றைத் தொடர்பு படுத்தல் வேண்டும். சிறிது காலமாகச் சில தமிழ்ப் புலவர்கள் இத்துறையில் முயன்று இவ்வித வரலாறுகள் அமைந்த நூற்களை வெளியிட்டு வருகின்றார்கள். அவர்களுள் தாம் ஒருவராய் இந்நூலை எழுதி வெளியிட்ட நண்பர் கா. மு. சின்னப்பா பிள்ளை அவர்கள் இத்துறையில் மேன்மேலு முயன்று இது போன்ற இன்னும் பல நூற்களை எழுதி வெளியிடுவார் என நம்புகின்றேன்.

இங்ஙனம்:
(Sd.) கா. ர. கோவிந்தராஜ முதலியார்.

**P. Thiruvenkata Mudaliar,** B. A. L. T.
*Head Master,*
*"Chintadripet High School" Madras.*

"நாக வில்லா"
வேப்பேரி,
20—9—1930.

நவீன கதைகள் மலிந்து கிடக்கும் இந்நாளில் பண்டைத் தமிழ் நூல்களின் சிறப்பை வெளிப்படுத்த முற்படுவர்வெகு சிலரே யாவர். அத்துணைச் சிறப்புடைய நூல்களில் திளைத்து, அவற்றின் நலன்களைப் பிறர்க்குப் பயன்படுமாறு எளிய இனிய நடையில் புதிதாகத் தொகுத்து உதவுவோர் பெருந் தொண்டாற்றுபவராதல் வேண்டும். தமிழ் மொழியைச் செம்மையாய், முறைதெரிந்து வளர்த்தல் மிக்க அவசியமென்று தற்போது நாட்டின் நன்மையை நாடும் பெரியார் பலரும் விழைகின்றனர். கடையெழு வள்ளல்களின் சரித்திரத்தில் பழந்தமிழ் மக்கள் பெருமையும், அவர்கள் ஆசார ஒழுக்கங்களும், பழக்க வழக்கங்களும், தமிழை வளர்ப்பான் வேண்டிக் குறுநில மன்னர்களும், குன்றத்தலைவர்களும், பிறருங் கைக்கொண்ட முறைகளும், பரக்கக் காணலாம் தமிழாசிரியர் திரு. K. M. சின்னப்பா பிள்ளை அவர்கள் ஈடுபட்டிருக்கும் இந் நன் முயற்சி மிகவும் பாராட்டற்பாலது. உயர்தரப் பாடசாலைகளின் மேல் வகுப்புகளிற் காணப்படும் பாஷாபிமானத்திற்கும், தமிழ் மொழித் தேர்ச்சிக்கும் ஏற்றவாறு இப் புதிய புத்தகம் பெரிதும் பயன்படுமென்று நினைக்கிறேன்.

(Sd.) P. Thiruvenkatam.

தே. போ. மீனாக்ஷிசுந்தரம் பிள்ளை, M. A. B. L., M. R. A. S.

அட்வோகேட்,
சென்னை.

"தமிழகம்"
சிந்தாதிரிப்பேட்டை,
21—9—1930.

திருவாளர் கா. மு. சின்னப்பா பிள்ளை அவர்கள் எழுதிய கடையெழு வள்ளல்கள் வரலாற்றை ஒரு முறை ஓதினேன். இளஞ்சிறுவரும் எளிதில் ஓதியுணர்ந்து இன்பந் துய்க்குமாறு இனிய செந்தமிழ் நடையில் இந்நூல் எழுதப் பட்டுளது. இந்நூலை ஆக்கிய தமிழ்ப் பெரியார் தமது ஆராய்ச்சியின் பயனை, இவ்வாறு எல்லோர்க்கும் பயன்படுமாறு உதவியமை அவரது அன்பின் ஆழத்தைக் காட்டுகின்றது. நம் முன்னோரின் பெருமையை அறிந்த ஒரு சிறுவன் தான் அடிமை என நாணி, உடல் கூசித் தலைகுனியாது, வள்ளல்கள் வழி வந்த சிறுவள்ளல் என மார்பினை அகலக் காட்டித் தலை நிமிர்ந்து நேர் நின்று உயர நோக்குவான். இவ்வாறு ஓங்கியபோது பிறக்கும் அடக்கமே சான்றாண்மை என்னும் செருக்கு. அஞ்சி நடுங்குவோர் அடங்குவதற்குக் கீழ் நிலை இல்லையன்றோ? தம்மையும் தந்துதவும் சால்பினால் வரும் தமிழ்ச் செருக்கு வளரவேண்டுமானால் தமிழ் வள்ளல்கள் வரலாற்றை ஓதல் வேண்டும். ஆதலின், ஒவ்வொரு பள்ளிக்கூடத்திலும் இந்நூல் உலவுமாறும், இதனால் தமிழ் மக்கள் உயருமாறும் ஆண்டவன் அருள்புரிவானாக.

இங்ஙனம்,

(Sd.) தே. போ. மீனாக்ஷிசுந்தரன்.

## FOREWORD.

I have read with much pleasure the booklet on the life of the "Last Seven Vallals" written by Mr. K. M. Chinnappa Pillai, Head Tamil Pandit of the Chintadripet High School, Madras. It contains brief and interesting accounts of seven great prince-chieftains who flourished, during the time of the last Madura Tamil Sangam as patrons of Tamil literature and were renowned for their unbounded liberality to classical Tamil poets and other learned men of that literary period.

In these days when "true charity, a plant divinely nursed, fed by the love from which it rose at first" flowing "from a sense of duty and a hope in God" is almost a non-entity, in these days when Tamil scholarship like Tamil study is a common rarity—a Tamil book written by a learned Tamil pandit in clear, chaste, modern prose in a simple and forcible style on princely liberality shown to classical Tamil scholars of yore is a welcome production indeed, reminding pandits and patrons of their duties to their country and the teachers and the taught of their duties to their mother-tongue—the greatness of both of which is dilated upon in almost every life of the seven benefactors.

The interesting literary matter abounding in the lives is of such a varied and enjoyable description as to stimulate a studious desire and taste and lead the readers on unconsciously into the beautiful language of the little

book of the scholarly author and into the sweet literature of the neglected vernacular of the great Tamil country. The classical quotations and the literary anexdotes arouse real enthusiasm and love for Tamil literature.

Nor is the booklet, small as it is, wanting in opportune, descriptions and inculcations of high themes and moral precepts useful to youngsters and elders alike such as the beauties of nature, the greatness of Tamil, the riches and splendour of the Tamil country, accounts of ancient customs, ideal friendship, the selection and possession of good friends, the common brotherhood of man, ideal kingship, kindness to subjects, kindness to animals brotherly affection and duties, chastity and the conduct and duties of an ideal wife, the training of children and youths, thrift, caste equality and religious toleration.

I have therefore great pleasure in introducing this valuable publication to all lovers and readers of Tamil and recommending it specially to the school-going population of the upper forms in particular as containing good model specimens for vernacular composition

P. PARTHASARATHY NAICKER, B.A., L.T., M.E.S. (Retd.)
*Retired District Educational Officer.*

Arunachala Mandiram
Mint Street, Madras.
22-9-30

கடவுள் துணை

# முகவுரை

"உலகம் என்பது உயர்ந்தோர் மாட்டே" என்னும் ஆன்றோர் மொழிப்படி ஒரு நாட்டின் பெருமை, அந்நாட்டில் தோன்றும் பெருங்குணம் படைத்த மக்களாலேயே விளங்கும். நந்தமிழ் நாடும், நற்குணம் படைத்த நல்லோர் பலராலேயே நல்லிசைபெற்று நானிலம் புகழ இலங்குகிறது.

அங்ஙனம், நம்முடைய நாட்டின் பெருமைக்குக் காரணர்களாகத் தோன்றிய பெரியோர்கள் சரித்திரங்களுட் பல, இந்நாளில் வெளிவந்து உலவுகின்றனவாயினும், அவர்கள் குண நலன்களுக் கேற்ப முன்னோர் வகுத்த முறைப்படி தொகுத்து வரையப்பட்ட நூல்கள் இன்றுகாறும் வெளி வராமையால் என் சிற்றறிவுக் கெட்டியவளவு

"ஈதல், இசைபட வாழ்தல், அதுவல்லது
ஊதிய மில்லை உயிர்க்கு"

என்னும் தேவர் திருவாக்குக்கு இலக்காய் நின்ற நல்லோர் களாகிய மூவெழு வள்ளல்கள் சரித்திரங்களை ஒருவாறு தொகுத்து மூன்று நூல்களாக எழுதலானேன். அவற்றுள் இந்நூல், கடையெழு வள்ளல்கள் சரித்திரங்களை யுடையது.

நம் நாட்டுப் பண்டைப் பெருமக்கள் வரலாறுகளை அடி முதல் முடிவுவரையில்முறையே விளக்கும் சான்றுகள்முற்றும் நாம் காணக் கிடைக்கவில்லை; சிற்சிலவே கிடைத்திருக்கின்றன. இன்னோன்ன நந்நாட்டில் உள்ள குறைபாடுகளுள் இவையும் சேரும். இவ்வள்ளல்கள் வரலாறுகளைக் காட்டும் ஆதாரங் களும் அங்ஙனமே உள்ளன. அவை புறநானூறு, அகநானூறு, நற்றிணை நானூறு முதலிய சங்க நூல்களுள் உள. அவற்

றன், பெரும்பாலும் புறப்பாட்டையும் சிறுபான்மை ஏனைய நூற்களையும் தழுவியும், கதைக்கேற்ப வேறு சில சேர்த்தும் இந்நூல் வரையப்பட்டது. தவிர, இச்சரிதங்கள் எழுதுவதற்கு, மகா மகோபாத்தியாய உ. வே. சாமிநாத ஐயரவர்களும், பிறரும் வெளியிட்டுள்ள சங்க நூல்களில் காணும் முகவுரைகள், குறிப்புரைகள், பாடினோர் பாடப்பட்டோர் வரலாறுகள், விசேடக்குறிப்புகள் முதலியவைகளும் பேருதவிகளாயிருந்து உத்சாகமும் ஊக்கமும் அளித்தன. ஆகையால், அவர்கட்கு என்றும் நன்றி செலுத்த யான் மிகவும் கடமைப் பட்டுளேன்.

இந்நூல், வள்ளல்கள் சரிதங்களை ஒருவாறு அறிவிப்பதுடன், பண்டைக் காலத்துப் பழக்க வழக்கங்களையும், அரச பக்தியினையும், அரசியல் முறைகளையும், தெய்வ வழிபாட்டினையும், தேகப் பயிற்சியின் அவசியத்தையும், தேச நேசத்தையும், நம்தமி ழபிமானத்தையும், நட்பின் நலத்தையும், மாணவர் கடனையும், பெண்கள் பெருங் கடமையையும், ஒற்றுமையின் உயர்வையும், வேற்றுமையின் வீழ்வையும், அறப்போர் மறப்போர்களையும், கற்றோர் பெருமையையும், செல்வம் படைத்தார் செய்கடனையும், ஆசிரியர் கடனையும், மற்றும், மக்கட்குரிய அரிய பல நீதிகளையும் தெளிவாய்த் தெரிவிக்கும். ஆயினும், ஆங்காங்கு இந்நூலின்கண் சிற்சில பிழைகளும் இருத்தல் கூடும். ஆதலால், அன்பு நிறைந்த ஆன்றோர் "குணநாடிக் குற்றமு நாடி அவற்றுள், மிகைநாடி மிக்க கொளல்" என்னும் தேவர் திருவாக்கை நோக்கிக் குற்றங்கடிந்து குணத்தைக் கொள்வார் என்று நம்புகிறேன்.

இது மாணவர்க்கே யன்றித் தமிழ்நலங் கருதும் மற்றையோர்க்கும் பெரிதும் பயன்படக் கூடியது. ஆகவே, இதனை ஆதரித்து, அடியேனை ஊக்குமாறு அனைவரையும் அன்புடன் வேண்டுகிறேன்.

சிந்தாதிரிப்பேட்டை
16—5—1930

இங்ஙனம்:
கா. மு. சின்னப்பன்.

## ஜ்ஞாபகார்த்த உரை

உலகில், அன்னையிற் சிறந்த கண்கண்ட தெய்வம் வேறொன்றும் இல்லை. ஆதலால், என்னை யீன்று அன்புடன் வளர்த்து, ஆளாக்கி, ஆண்டவன் அடியிணையணைந்த என் அன்னையார் தங்கமுத்து அம்மையார் அவர்கள் ஜ்ஞாபகார்த்தமாக இக்கடையெழு வள்ளல்கள் சரித்திரங்களை எழுதலாயினேன்.

கா மு. சி.

நூலாசிரியன்.

# பொருளடக்கம்

## கடவுள் வாழ்த்து

அங்கிங் கெனாதபடி எங்கும் பிரகாசமாய்
ஆநந்த பூர்த்தி யாகி
அருளொடு நிறைந்ததெது? தன்னருள் வெளிக்குளே
அகிலாண்ட கோடி யெல்லாம்
தங்கும் படிக்கிச்சை வைத்துயிர்க் குயிராய்த்
தழைத்ததெது ? மனவாக்கினில்
தட்டாமல் நின்றதெது ? சமய கோடிகளெல்லாம்
தந்தெய்வம் எந்தெய்வம் என்று,
எங்கும் தொடர்ந்தெதிர் வழக்கிடவும் நின்றதெது ?
எங்கணும் பெருவழக்காய்
யாதினும் வல்லவொரு சித்தாகி இன்பமாய்
என்றைக்கும் உள்ளதெது? மேல்
கங்குல்பகல் அறநின்ற எல்லையுள தெது ? அது,
கருத்திற் கிசைந்ததுவே
கண்டன வெலாம் மோன வுருவெளிய தாகவும்
கருதி யஞ்சலி செய்குவாம்.

# பிழை திருத்தம்.

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 1 | 7 | பிறவி ஆறு, | பிறவி ஆறு. |
| 2 | 4 | எங்ஙனமெனில் ? | எங்ஙனமெனில், |
| 3 | 8 | ஏனென்றால் ? | ஏனென்றால், |
| 5 | 18 | ஆயிரத்தைந்நூறு | இரண்டாயிரம் |
| ,, | 19 | இராஜ இராஜ சேரன் | ஓர் சேரன் |
| 6 | 27 | எல்லாம் | எல்லாரும் |
| 7 | 20 | ஏனெனில் ? | ஏனெனில், |
| 8 | 21 | என்னவெனில் ? | என்னவெனில், |
| 10 | 9 | தெய்வீகத்தன்மை | தெய்விகம் |
| 12 | 1 | கைக் | கை |
| 15 | 11 | தனக்குள் | தமக்குள் |
| 17 | 16 | தெய்வீகம் | தெய்விகம் |
| 20 | 18 | வியனகர் | வியனகர |
| 21 | 7 | கூறிய | கூரிய |
| 24 | 21 | பொருள்களைச் | பொருள்களைக் |
| 31 | 28 | முயற்சித்து | முயன்று |
| 35 | 17 | தனது | தமது |
| 28 | 17 | தாம்பிரபரணி | தாம்பிரபன்னி |
| 29 | 1 | உண்பேர் | உண்போர் |
| 27 | 25 | நிறம்பி | நிரம்பி |
| 62 | 16 | குரவர் | குறவர் |
| 78 | 24 | இப்பேது | இப்போது |
| 127 | 24 | ஔயாரை | ஔவையாரை |

கடவுள் துணை.

# கடையெழு வள்ளல்கள்

## சரித்திரம்

### (தோற்றுவாய்)

உலகில் தோன்றும் பொருள்கள் இரண்டு வகைப்படும். அவை வளரும் பொருள்களாகவும், வளராப் பொருள்களாகவும் விளங்குகின்றன. வளர்கின்ற பொருள்களுக்கு உயிர் உண்டு. வளராப் பொருள்களுக்கு உயிர் இல்லை. உயிர் உள்ள பொருள்கள் ஏழுவகைப்படும். அவை, தேவர், மக்கள், விலங்கு, பறவை, நீர்வாழ்வன, ஊர்வன, தாவரம் என்பனவாம். அவற்றுள் கண்கண்ட பிறவி ஆறு, அவற்றுள், மக்கட் பிறப்பே மிகவும் உயர்ந்தது. மக்களாகப் பிறத்தல் மிகவும் அரிது. அதுவும் கூன், குருடு, செவிடு, நொண்டி, முடம், மொண்டி முதலிய அங்க ஈனங்கள் இன்றிப் பிறத்தல் அரிதினும் அரியதாகும். ஔவையாரும் "அரிது அரிது மானிடராதல்" அரிது என்றார்.

இவ்வுயர்ந்த பிறப்பை அடையும் ஒவ்வோர் ஆணும் பெண்ணும் அடையவேண்டிய பயன்கள் நான்கு. அவை, அறம் பொருள் இன்பம் வீடு என்பனவாம். இந்நான்கை அடைதற்கு முதற்காரணமாய் இருப்பது அறிவு. அவ்வறிவு இயற்கையறிவு, செயற்கையறிவு என இருவகைப்படும்.

இயற்கையறிவு பிறக்கும் பொழுதே தொடர்ந்து வருவது. செயற்கை யறிவு கல்வியாலும் கேள்வியாலும் உண்டாவது. செயற்கை யறிவு இல்லாவிட்டால், இயற்கையறிவு நன்கு பிரகாசிக்காது. எங்ஙனமெனில்? நமது கண்களில், பொருள்களைக் காட்டும் சக்தி, இயல்பாகவே அமைந்திருக்கிறது. ஆயினும், அவ்வியற்கை சக்தி ஒன்றே பொருட்களைக் காட்டுவதில்லை. சூரியன், சந்திரன், விளக்கு, மின்னல் முதலியவற்றின் ஒளிகளாகிய செயற்கை சக்தி அதனோடு கூடினாற்றான் அது, தன் வேலையை ஒழுங்காகச் செய்யும். அதுபோலவே செயற்கையறிவின் உதவியைப் பெற்றால்தான் இயற்கையறிவு நலந்தரும். ஆகையால், மனிதராய்ப்பிறக்கும் ஒவ்வொருவரும் கற்றோ அல்லது கேட்டோ செயற்கையறிவைக் கட்டாயம் பெறுதல் வேண்டும். அதுவும் இளமையிலிருந்தே பெற்றுவரல் வேண்டும். அதனை நற்குண நற்பழக்கமுடைய நல்லோரிடமிருந்தே பெற முயலல் வேண்டும். அங்ஙனம் அடையுங்கால் அன்பும், அடக்கமும், ஊக்கமும், சுறு சுறுப்பும் கொண்டு இருந்தால்தான் அவ்வறிவைப் படிப்படியாகப் பெற முடியும்.

செயற்கையறிவை, அடைந்த பிறகு, முற்கூறிய மக்கட் பயன்களை அடைய முயற்சித்தல் வேண்டும். அம்முயற்சி அறநெறிக்கும் பகுத்தறிவுக்கும் ஒத்திருத்தல் வேண்டும். அவ்வாறிருப்பின் எல்லாரும் இயல்பாகவே மதித்து மெச்சுவார்கள். பிறர் கொண்டாடும்படி வாழும் வாழ்க்கையே மேலான வாழ்க்கையாகும். பலர்மெச்ச வாழாதான் பிறந்திறப்பதைவிடப் பிறவாமல் இருத்தலே நன்று. நல்லிசையுடன் வாழ்ந்தவன் இறந்தாலும் இருப்பவனே ஆவான். அவ்விசையுடம்பு அவனை இவ்வுலகம் உள்ளவரை நிலைநிறுத்தும். புகழின்றி

வாழ்பவன், உலகில் பிறந்திறக்கும் ஈ, எறும்பு, ஆடுமாடு முதலிய பிராணிகட்கே சமமாவான். ஆதலால் புகழுடம்பின் மேன்மையை உணர்ந்த நந்நாட்டு முன்னோரிற் பலர், அதனைப் பெறுதற்கு எத்தனை வழிகளுண்டோ அத்தனை வழிகளிலும் முயன்று பெற்றுள்ளார்கள். அவர்கள், பல்லாண்டுகட்கு முன்னர் இறந்தும், இன்றுவரை நம்மால் புகழ்ந்து பாராட்டவும், போற்றவும் படுகின்றார்கள். எனினும், நாம் அவர்களை ஒரேபடியில் வைத்துப் புகழ்வதில்லை. ஏனென்றால்? அவர்களுடைய குணம், செயல் முதலியவைகளுக்கேற்ப அவர்களுக்குள் உயர்வும் தாழ்வும் ஏற்பட்டுள்ளன.

எவர், தம் உடல் பொருள் ஆவி முதலியவற்றால், தம்மிடம் வரும் யாசகரையும், வறியரையும், அநாதைகளையும், சாதிமத பேதமும், பக்ஷபாதமும் இன்றிக் காப்பதோடு, கல்வி, ஒற்றுமை, தேச முன்னேற்றம் முதலியன ஏற்படுதற்குத் தகுந்த உதவியும் செய்வாரோ அவரே யாவரினும் மிகுந்த புகழ்பெற்றவராவர். அக்குணமுள்ளபெரியோர்களையே வள்ளல்கள் என்று எல்லாரும் போற்றுகின்றார்கள்.

வள்ளல் என்ற சொல்லுக்குத் தன்னிடம் வந்து ஏதாவது ஒன்றைக் கேட்போருக்கு இல்லை என்று சொல்லாமல், வாங்குபவர் "போதும் போதும்" என்று சொல்லுகிற வரையில் அவர்கட்கு வேண்டிய பொருளை வாரிவாரிக் கொடுக்கும் கொடைக்குணம் உடையோர் என்பது பொருளாம்.

அவ்வள்ளல் தன்மை யுடையவர்கள், மூன்று வகையினராவார்கள். யாசிக்க வருபவர், தம்மைப் பார்த்து இன்ன பொருள் வேண்டும் என்று கேட்பதற்கு முன்னமே அவர்கள் முகக்குறிப்பை உணர்ந்து, வேண்டும் பொருளை அளிப்போர் முதல் வள்ளல் என்றும்; இன்ன பொருள் வேண்டும் என்று

கேட்டபிறகு கொடுப்போர் இடை வள்ளல் என்றும்; தம்மைப் புகழ்ந்து கூறிய பின்பு கொடுப்போர் கடை வள்ளல் என்றும் கூறப்படுவார்கள்.

நம்முடைய நாட்டில், இம்மூவகைத் தன்மையிற் பலர் புகழ்பெற்றுள்ளார்கள். அவர்களை முதலெழு வள்ளல்கள், இடையெழு வள்ளல்கள், கடையெழு வள்ளல்கள் என வகைக்கு எழுவராக வகுத்துப் புகழ்ந்து கூறியுள்ளார்க ளவர்கட்குப் பின்வந்த நம் பெரியோர்கள். அம்முப்பிரிவினருள் கடையெழு வள்ளல்கள் சரித்திரங்களை விளக்கமாய் அறிவோம்.

# நூல்

## 1. அதிகமான்

தோன்றின் புகழொடு தோன்றுக அஃதிலார்
தோன்றலின் தோன்றாமை நன்று. (திருக்குறள்)

இனிய நந்தமிழ் நாட்டைப் பண்டைக்காலத்தில் பல்லாண்டுகளாக அரசு புரிந்த மன்னர்களில் சேர, சோழ, பாண்டியர் என்னும் மூவகையினரே முடியுடை வேந்தர்களாவார்கள். அவர்கள் பெரும் புகழும் பேராற்றலும் வாய்ந்தவர்கள். உலகிலுள்ள ஏனைய நாடுகளில் அரசாட்சி ஏற்படுவதற்கு முன்னமேயே அவர்கள்தாம், அரசர்கள் என்ற பெயர்களோடு வெளிப்போந்தவர்கள். அவர்கள் தவிர, சிற்றரசர்களும், குறுநில மன்னர்களும், தனிப்பட்ட வேந்தர்களுமாகப் பலர், நாட்டின் பல பாகங்களில் தங்கி அரசு வீற்றிருந்தார்கள். அவர்களுள் பெரும்பான்மையோர் முற்கூறிய மூவேந்தர்கள் வழிவந்த மன்னர்களாகவும், சிலர் அவர்களிடம் பரிசாகப்பெற்ற நாடுகளை ஆண்ட அரசர்களாகவும், சிலர் தம் அரிய ஆற்றல் முதலியவற்றால் தாமே புதிதாக நாடு கோலியோ, வேற்று நாட்டைக்கைப்பற்றியோ ஆண்ட வேந்தர்களாகவும் விளங்கினார்கள்.

ஏறக்குறைய ஆயிரத்தைந்நூறு ஆண்டுகட்கு முன்னர் இராஜ இராஜ சேரன் என்பவன், சேரநாட்டை ஆண்டு வந்தான். அவன் காலத்தில், சேர நாட்டைச் சேர்ந்துள்ள ஊர்களுள், அதிகை என்னும் பேரமைந்த ஓர் சிற்றூர் இருந்தது. அவ்வூருக்கு அஞ்சி என்னும் பெயருடையவன்

தலைவனாய் இருந்தான். அவனை எழினி என்றும் கூறுவர். அவன், சேர அரசர் பரம்பரையில் வந்தவன். அவன், மக்களாய்ப் பிறப்போர் ஒவ்வொருவரும் சீரிய உடல்நலம் உற்று விளங்கினால்தான், ஏனைய நலன்களைப் பெற்றுத் துய்க்க முடியும் என்று ஓர்ந்திருந்தான். அதனால் அவன், தன் இளமைப் பருவம்முதற்கொண்டே தேகப்பயிற்சியை முறையாகச்செய்து வந்தான்; விற்பயிற்சி, வாட்பயிற்சி முதலியனவும் நன்கு பயின்றிருந்தான். அவற்றால் அவன், நல்ல பலவானாகவும், சிறந்தவீரனாகவும் தோற்றினான். அவன்தோற்றம், கண்டோர்அஞ்சும்படி துலங்கிற்று. அவ் வதிகையூரில் வாழ்ந்து வந்த மக்களுள் பலர், இயல்பாகவே வீரர்களாக விளங்கினார்கள். அவர்களுக்கு மழுவர் என்று பெயர். அஞ்சி அம்மழவர்களைச் சேனையாகக்கூட்டித், தானே தலைமையுற்று, நாடோறும் அவர்களுக்குச் சிறந்த தேகப்பயிற்சி யளித்துப் போர் புரியும் முறைகளைக் கற்பித்து வந்தான். அதனால் அவர்கள், அமர் செய்யும் அரிய ஆற்றலைப் பெற்றுத் தங்கள் தோள்வலிக்குத் தக்க உணவை எதிர்பார்த்துக்கொண் டிருந்தார்கள்.

அக்காலத்தில், சேர நாட்டைச் சூழ்ந்து, சிற்சிறு நாடுகள் பலவிருந்தன. அவற்றுள் தகடூர் என்பது ஒன்று. அது குதிரை மலைக்குப் பக்கத்திலுள்ளது. இப்போது தகடூர்க்குத் தர்மபுரி என்றும், குதிரை மலைக்குக் குத்திராயமலை என்றும் பெயர்கள் வழங்குகின்றன. இவை யிரண்டும் சேலம் ஜில்லாவைச் சேர்ந்துள்ளன. அச்சமயம் அத்தகடூர் நாட்டை ஆண்டுவந்த சிற்றரசன் இறந்து விட்டான். அதனால் அங்கு உள்நாட்டுக் கலகம் ஏற்பட்டது. நாட்டின் அமைதி யகன்றது. 'தடி எடுத்தவன் தண்டற்காரன்' என்பது போல் தண்டு எடுத்தவர் எல்லாம் தாம் தாமே அரசர் என்று

பறை சாற்றினர். இக் கலகச்செய்தி நாட்டின் பல பாகங் களுக்கு எட்டியது. எழினியும் 'தகடூர்க்குத் தகுந்த வேந் தன் இல்லை' என்று கேள்விப்பட்டான்; உடனே அவன், தன் சேனையுடன் புறப்பட்டுத் தகடூரை யடைந்தான்; கலகத் தலை வர்களை யடக்கினன்; மற்றும், எதிர்த்தவரை எமனுலக மனுப்பினன். நாட்டின் குழப்பம் அறவே ஒழிய, குடிமக்கள் மிக்க மகிழ்ச்சியுற்றார்கள். பின்பு, அவர்கள் தம் நாட்டிற்கு எழினியே அரசனாக இருக்கவேண்டுமென்றார்கள். எழினியும் குடிகள் விருப்பப்படி அந்நாட்டிற்கு முடிமன்னன் ஆயினன்.

எழினி, அதிகை என்னும் ஊரினின்று போந்தமை யால், அன்று முதல் அவனுக்கு அதிகமான் என்னும் பெயர் வழங்கலாயிற்று. அவன் சேரர் குலத்துவழி வந்த தோன்ற லாகையால், அம்மன்னர்க்குரிய சின்னங்களாகிய விற்கொடி பனைமாலை, மங்கள முரசு முதலியவைகளையே தன்னரசுக்கும் சின்னங்களாக அமைத்துக் கொண்டான். அதிகமான் அரச னாக வந்த நாள் முதல் குடிகளை மிக அன்புடன் பாராட்டி வந் தான். அதனால் அவர்கள், அச்சமற்று, இன்பம் பெற்று அன் புடன் வாழ்ந்து வந்தார்கள். அவன் குடிமக்களிடத்தில் மிக்க அன்புடன் நடந்து கொண்டானென்று கூறுவதில் வியப் பொன்றும் இல்லை. ஏனெனில்? எல்லாரிடத்தும் சாலப் பரி வோடு நடந்து கொள்ளும் நற்குணம் அதிகமானிடம் இயல் பாகவே அமைந்திருந்தது. அன்றியும், குடிகள் ஒற்றுமைப் பட்டு, உயர்நலமுற்று ஓகையுடன் வாழ்ந்தால்தான், மன் னன் ஆட்சியும் மாட்சியுடன் நீட்சிபெறும் என்னும் நீதியை அதிகமான் நன்கு ஓர்ந்தவனாகையால், அவன், தன் ஆளு கைக்கு அடிப்படையாயுள்ள குடிகளிடத்தில் அன்பாயிராமற் போவனோ? மற்றும் அவன் குடிகட்குத் தன் பரிசனத்தாலும்

பகைவராலும் ஓரிடையூறும் உண்டாகாமல் அவர்களைக்காத்து வந்தான். நாள் செல்லச் செல்ல நாட்டில் செல்வம் மிகப் பெருகிற்று. அதிகமான் சிற்றரசனாயினும் அரசியல் முறையைப் பேரரசர்களும் கண்டு வியக்கும்படி வகுத்தான்.

அதிகமான் பொருட்செல்வத்தை விடக் கல்விச்செல்வத்தை இளமையிலேயே சாலப் பெற்றிருந்தான். அதனால் அவன், படித்தவரிடமும் பாவலரிடமும் மிகவும் பக்ஷமாயிருந்தான். நாட்டின் எம்மருங்கும் தமிழ்ப்பயிர் ஓங்கி வளர வேண்டுமென்பதே அவனுடைய பேராவல். அதற்கேற்ப அவன், ஊர்கள் தோறும் பள்ளிச்சாலைகள் ஏற்படுத்தினான். புலவர்களுக்குப் பொருளை வாரியளித்து அவர்களை ஆதரித்து வந்தான். அதனால், அந்நாட்டில் செல்வப்பொருள் செழித்தவாறே கல்விப்பொருளும் பெருகிற்று. இங்ஙனம் கல்வியும்செல்வமும் கலந்து சிறந்துள்ள நாட்டிற்கு வேறு என்னதான் வேண்டும்? இவ்வளவிற்கும் காரணம், அரசன் செய்யும் ஆட்சிமுறையது மாட்சியே அன்றோ? அதிகமான் திறமையை முடியுடைய மூவேந்தர்களுங் கேட்டுப் பாராட்டி மிகவும் புகழ்ந்தார்கள். ஆயினும், தம்மனத்தே பொறாமையும் ஒருபால் பூண்டார்கள்.

உலகில் தோன்றும் பிராணிகளுக்கு ஏற்பட்டுள்ள முதற்கடமை என்னவெனில்?—அவை, தம்முள் ஒன்றுக்கொன்று உதவிபுரிந்து கொள்ளுதலேயாம். இதனை, அஃறிணை உயிர்களிடத்து இன்றும் என்றும் காணலாம். உதாரணத்திற்கு, மரங்கள் மகரந்தம் மாற்றுகின்றமையும், காகங்கள் கரைந்து உண்கின்றமையும் ஆகிய செயல்களே போதும். அஃறிணை அன்பு இத்தகையதாயின், ஆறறிவு அடைவுடன் பெற்ற மக்கள் அன்பு எத்தகையதாயிருத்தல் வேண்டும் என்பதை இயம்ப

வும் வேண்டுமோ ? உடலாலும் உயிராலும் சொல்லாலும் பொருளாலும் கூடுமான அளவு உதவிபுரிதலே மக்கட்கழகு என அறநெறி நூற்களும் அறைகின்றன.

அதிகமான் அந் நன்னெறிகளை நன்கு உணர்ந்திருந்தான். ஆகையால், அவன், நல்லறங்கள் பல நாடோறும் செய்து வந்தான்; மற்றும், தன்னிடத்தில் யார் எச்சமயத்தில் வந்து எப்பொருளைக் கேட்பினும் இல்லை என்றுரையாமல் ஈந்து வந்தான். அவனுக்குத் தன் தாய்மொழியாகிய தமிழினிடத்துப் பெரு விருப்பமாதலால், அவன் தன்னிடம்வரும் புலவர் பெருமக்களிடம் அளவிலா அன்புடன் அளவளாவி, அளவிலாப் பொருளளிப்பன். அப்புலவர்களும் அதிகமானுடைய கொடைக் குணத்தைப் பலபடி பாராட்டிப் புகழ்ந்து பாடிச் செல்வார்கள். தவிர, அவர்கள் செல்லும் இடங்கள்தோறும் அவனைப் போற்றிப் பேசுவார்கள். அதனால், அவனுடைய பேரும் புகழும் தமிழ் நாடெங்கும் பரவலாயின.

அக்காலத்தில்தான் ஔவையார் என்னும் நமது மூதாட்டியார் தமிழ் நாட்டில் வாழ்ந்து வந்தார். அவர் அதிகமானுடைய பெருங்குணத்தைக் கேள்விப்பட்டார்; அவனைக் காண மிகவும் விழைவு கொண்டார். அஞ்ஞான்று அவர் சோழ நாட்டில் சஞ்சாரம் செய்து கொண்டிருந்தார். உடனே தகடூரை நோக்கிப் புறப்பட்டார். அந்நாளில் இற்றை நாளைப் போல் மோடார், பஸ், ரெயில் முதலிய வாகன வசதிகள் இல்லை. வெகுதூரம் செல்வதாயினும் நடந்தே போகவேண்டும். செல்வருட் சிலர் மாட்டுவண்டிகள் வைத்திருப்பார்கள். நம்முடைய ஔயாருக்கு வண்டி முதலிய வாகனம் ஒன்றுமில்லை. தவிர அவர் ஒருநாளும் வண்டி முதலிய எந்த வாகனத்தின்மீதும் ஏறிச் சென்றதில்லை. எங்குப் போக நேரி

னும் நடந்தே செல்வார். அவ்வாறே அவர், பலவூர்களைக் கடந்து நடக்கலானார். அவர் முதுமையுற்றவராகையால் நெடியதூரம் நடக்கமாட்டாராய் இடை இடையே பெரிதும் களைப்படைந்தார். ஆயினும், காந்தத்தை நாடும் ஊசியைப்போல் அதிகமான் நற்குணத்தை நாடிச் சின்னாளில் தகடூரை நண்ணினார். ஆங்கு எதிர்ப்பட்டாரை உசாவி எழினியின் மாளிகையைக் கண்டார். மிக அகக்களிப்போடு அதனை நோக்கிச்சென்றார்.

அதிகமானும், ஔவையாருடைய பெரும் புலமையைக் கேள்விப்பட்டிருந்தான். அவர் தெய்வீகத் தன்மை வாய்ந்தவர் என்பதையும் அறிந்திருந்தான். ஆகையால், அவன் ஔவையாரைக் கண்டு களிக்கவேண்டும் என்று எண்ணி அதற்கு ஏற்ற அற்றம் நோக்கியிருந்தான். அவன் ஒவ்வொரு நாளும், பகலிலும் இரவிலும் உண்பதற்கு முன்பு, தன் வீட்டிற்கு வெளியே வந்து, ஏழை எளியர் பசியினால் வருந்துகிறார்களா என்பதை அறிவதற்கு அக்கம் பக்கம் சுற்றிப் பார்ப்பது வழக்கம். அவ்வழக்கப்படி அவன் பகலில்புசிக்கும் முன்பு வெளியில் வந்து சுற்றிப்பார்த்துக்கொண்டிருந்தான். அவ்வமயம், அவன் கண்களுக்கு ஔவையாரது வருகை தென்பட்டது. ஔவையாரும் அவனைக் கண்டார். ஒருவரை ஒருவர் உற்றுப்பார்த்துக் கொண்டார்கள். முன்னமே இருவருக்கும் முகப்பரிச்சயம் இன்மையால், அவர்கள் உள்ளங்களும் ஏதேதோ சிந்திக்கலாயின.

ஔவையார்:—“அம்மாளிகைக்கு வெளியே நிற்கின்றவன் யார்? அவன்தான் அதிகமானோ? அவன் கண்ணில் அருள் வழிகின்றது. முறுவல் பூத்த முகத்தில் அன்பொளி இலங்குகிறது. திண்ணிய தோளில் கண்ணிய வீரம், வீசுகிறது” என்று எண்ணிக்கொண்டே அவனை நாடிச் சென்றார்.

அதிகமான்:—“அதோ! வருகின்ற பழுத்த பழம் யாரோ!! ஐயோ! தூய்ய வடிவமாய்த் துலங்கும் இம்முதியோரையும் வெய்யவன் வாட்டுகின்றானே? என்ன கடுமை! இரவியது கொடுமை!! இவர் நம்மையே நோக்கி வருகிறாரே. ஔவையார் என்று கூறப்படும் பெரியார் இவர்தானோ?” என்று தன் னுளத்தில் எண்ணினான்.

எவர் தன்னிடம் வரினும், கண்ட உடனே எதிர்சென்று அன்புடன் வரவேற்று உபசரிக்கும் உத்தம குணம் வாய்ந்த அதிகமான், ஔவையார் தன்னருகே வந்ததும், சடுதியிற் சென்று சரணம் சொல்லி “அம்மையாரே! வாருங்கள்!! வாருங்கள்!!! இவ்வளவு வருத்தத்துடன் நடந்து வரலாமா? என்னில்லத்திற்கு வாருங்கள். உங்கள் களைப்பொழிய இனிய உண்டியளிப்பன். புசித்துப் பசியாறிய பின்பு நீங்கள் வந்த வேலையைப் பார்க்கப்போகலாம்” எனப் புகன்று, தன் மாளிகைக்குள்ளே அழைத்துச் சென்றான்; அறுசுவை யுண்டியை யன்புடனிட்டான். பின்பு மெத்தெனவிருக்கும் மெத்தையைக் காட்டி “உண்ட இளைப்புத் தொண்டருக்கு முண்டு” என்று கூறி ஔவையாரை அதன்மேல் படுத்துறங்கச் சொல்லி விட்டுத் தான் போனகம் செய்யச் சென்றான்.

ஔவையார், அவனளித்த உணவை வயிறு நிறம்ப உண்டு, சிறிது களைப்பாற, அவன் கூறியாங்கு படுக்கையில் படுத்துக்கொண்டு பின்வருமாறு சிந்திக்கலானார். “வந்தவர் இன்னார் என்று அறியா முன்னமே முகமன் கூறி உபசரிக்கும் உயர்குணம் உள்ளோனை என் வாழ்நாளில் இன்றே கண்டேன். ஆ! என்னே இவன் குணத்தினது பெருமை!! அதிகமான் என்போன் இவனே. அதிற் சிறிதும் ஐயமில்லை.” என்று எண்ணியவாறே அயர்ந்து உறங்கி விட்டார். சில நாழி

கைக் கழிந்தபின் விழித்தெழுந்தார். அதிகமான் வழக்கப்படி வேலையைப் பார்த்துக்கொண்டிருக்கும் மண்டபம் சென்றார். இருவரும் அன்புடன் அளவளாவி, ஒருவரை ஒருவர் இன்னின்னார் என்று அறிந்து கொண்டார்கள். தன்னால் உபசரிக்கப்பட்டவர் ஔவையாரே என்பதை அதிகமான் அறிந்ததும் அடக்கமுடியாத ஆநந்தம் கொண்டான். அவ்வையாரை அன்னையினும் அதிகமாக மதித்தான்; எப்போதும் தன்னில்லத்திலேயே இருந்து விடும்படி அவரை வேண்டிக் கொண்டான். ஔவையாரும் அவன் வேண்டுகோளுக் கிணங்கிச் சின்னாள் தங்கியிருந்தார்.

அவ்விதம் ஔவையார் ஓரிடத்திலேயே நிலைத்து விட்டால் அவர் மக்கட்குச் செய்யவேண்டிய கடமையைச் செய்யாமல் ஒழிவர். ஆனால், அங்கே அதிகமான் காட்டும் அன்பு அவரை ஈர்த்துப் பிடிக்கிறது. ஔவையார்க்கு எதை ஏற்பது, எதை எள்ளுவது என்பது தோன்றவில்லை. ஆயினும், அதிகமான் பெருங்குணத்தைத் தமிழ்நாட்டின் மூலை முடுக்குகள்தோறும் சென்று பரப்பவேண்டும் என்று தீர்மானித்து, அதிகமானை யணுகிப் பல இனிய பாக்களைச் செய்து அவனைப் புகழ்ந்தும் வாழ்த்தியும் பாடிவிட்டு, இனி அடிக்கடி வருவதாகக் கூறி யவனிடம் பிரியா விடைகொண்டு வேற்றூர் புறப்பட்டார். ஔவையார் தவிர, பரணர், பெருஞ்சித்திரனார், அரிசில் கிழார் முதலிய பெரும் புலவர்களும் அடிக்கடி அதிகமானிடம் வந்து தங்கி வதிவார்கள்; அவனைப் புகழ்ந்து பாடுவார்கள்; பரிசில் பல பெற்றுச் செல்வார்கள்.

உலகில் உறையும் மக்களுட் சிலர், தம்மிடம் வரும் ஏழை, எளியர் முதலிய இரவலர் ஒரு முறைக்கு மேலோ அல்லது இருமுறைக்கு மேலோ மீண்டும் வருவார்களே

யானல் அவர்களைக் காணும்போதே மனஞ்சினக்கவும், முகம் சுளிக்கவும், வாய் முணுமுணுக்கவும் ஆகி, அவர்கள் அருகே யடைந்ததும கடுகடுத்துப்பேசி, ஏசி எள்ளுகிறார்கள். ஆனல், அதிகமானே ஒரு நாளும் அங்ஙனம் செய்யான். தன்னிடம் முன்பு வந்தவரே பின்பும் பலமுறை வருவாராயினும் ஒவ்வொரு முறையும் அவர்களை ஆர்வமுடன் வரவேற்று அவ்வப்போது வேண்டும் பொருளை அன்புடன் அளித்து ஆதரித்தனுப்புவான். இத்தகையர் பொருட்டன்றோ நாலடியாரும்:—

"பன்னாளும் சென்றக்கால் பண்பிலார் தம்முழை
என்னானும் வேண்டுப என்றிகழ்ப—என்னானும்
வேண்டினும் நன்றுமற் றென்று விழுமியோர்
காண்டொறும் செய்வர் சிறப்பு."

என்று கூறுகின்றது.

ஔவையார், அதிகமானிடம் பன்முறை வந்து பரிவுடன் தங்கிய நாட்களுக்கு எல்லை இல்லை. அவ்வச்சமயங்களில் அவன் காட்டிய அன்பைப் புகழ்ந்து ஔவையார்:—

"ஒரு நாட் செல்லலம் இருநாட் செல்லலம்
பல நாள் பயின்று பலரொடு செல்லினும்
தலைநாட் போன்ற விருப்பினன் மாதோ
அணிபூண் அணிந்த யானை இயல்தேர்
அதியமான் பரிசில் பெறூஉம் காலம்
நீட்டினும் நீட்டா தாயினும் யானைதன்
கோட்டிடை வைத்த கவளம் போலக்
கையகத் ததுவது பொய்யா காதே
யருந்தே மாந்த நெஞ்சம்
வருந்த வேண்டா வாழ்கவன் றாளே"

என்று பாடியுள்ளார்.

இதன் பொருள்:—அழகிய பூணணிந்த யானையையும் ஒழுங்காயமைந்த தேரையும் உடைய அதிகமானிடம் யாம் ஒருநாளன்று, இருநாளன்று, பலநாள் சென்று தங்கினேம்; அங்ஙனம் பலபேருடன் கூடிச் சென்ற நாட்களிலும் அவன், எம்மை முதல் நாள் கண்டபோது காட்டிய அன்பையே என்றும் காட்டி உபசரித்தான். அவனுடைய பரிசிலைப் பெறுங்காலம் நீட்டிப்பினும் நீட்டியாதொழியினும், யானைவாயிற்கொண்டு நுகருமளவும் கோட்டிடையே வைத்திருக்கும் கவளம், சிறிது காலம் தாழ்ப்பினும், அது தவறாமல் அதனால் உண்ணப்படுவது போலப் பரிசிலும் நம் கையகம் இருப்பதேயாகும். ஆகையால், அதனை உண்ண விரும்பும் நெஞ்சே நீவருந்தவேண்டாம். அவன் தாள்வாழ்க;" என்பது.

உலகில் வாழும் எப்பிராணியும் தன்னுடலை எளிதில் விட்டுப்பிரிய இசையாது. உடலொழியின் உயிர் நீங்கிப் போகும். அதனால், உலக இன்பத்தைப் பெறமுடியாது. ஆகவே, மக்களும் தாம் நேசிக்கும் எல்லாப் பொருள்களையும் விட உயிரையே மிகுதியும் நேசிக்கின்றார்கள்; நீண்ட நாள் உலகில் வாழ விரும்புகிறார்கள்; உயிர் நீங்காமலிருக்க உடலுக்குப் பாதுகாவல் பல புரிகின்றார்கள். மேனாட்டாரும் இப்போது நீங்கும் உயிரை மீண்டும் பெறுவதற்கு அரிய முயற்சி செய்து வருகின்றனர். அவ்வாருயிர் தங்கியிருக்கும் உடல் பலமுடன் விளங்கவே பலர், பல ஔடதங்களை உண்கின்றார்கள்; சிறந்த தேகப்பயிற்சி செய்கின்றார்கள்; சிலர், யோகமும் தவமும் புரிகின்றார்கள்; மற்றுஞ் சிலர், வேறு முறைகளையும் கையாளுகிறார்கள். எனவே, அதிகமானும் நெடிய நாள் உலகில் வாழ விரும்பினான். அதற்குரிய சிறந்த முறை யாதெனச் சிந்தித்தான்; தன்னிடம் வரும் பெரியோர்

ஒவ்வொருவரிடமும் தன் கருத்தைத் தெரிவித்தான். ஒருவரும் அவன் மனமுவக்கும்படி வழிகாட்டவில்லை. ஒருநாள் அதே ஏக்கமாகத் தன்னில்லத்தின் புறத்தே ஓர் ஆதனத்தமர்ந்து கொண்டிருந்தான் அதிகமான். அப்போது, ஓர் மூதறிஞர் அவனிடம் வந்தார். அவன், அவரைக்கண்டதும் சட்டென வெழுந்து பொருக்கெனப்போய் எதிர்கொண்டழைத்து, அவர் மனம் மகிழும்படி உபசரித்தான்; பிறகு, அவரை உயரிய இருக்கையில் இருத்திக் கைகூப்பி வணங்கித் தன் கருத்தை அவரிடம் வெளியிட்டான். அவரும் "அருங்குணக்குன்றுபோன்ற இக்கொடையாளி நீண்ட நாள் உலகில் வாழ்ந்திருத்தல் அனைவர்க்கும் நன்றே" என்று தனக்குள் எண்ணி அவனைப்பார்த்து "வறியர்க்கு வரையாது அளிக்கும் வள்ளலே! இதோ தோன்றும் உன்னுடைய குதிரைமலையின் மேல் சரிந்த பெரிய ஓர் பிளவு உண்டு. அப்பிளவில் ஒரு நெல்லி மரம் உளது. அது பல்லாண்டுக் கொருமுறைதான் பலன் தரும் குணமுடையது. ஆயினும், கனிகள் ஒன்றிரண்டுக்கு மேல் அம்மரத்தில் உண்டாவதில்லை. அம்மரத்தினிடம் எவரும் எளிதில் போகமுடியாது. ஒருகால், அரிய பெரிய முயற்சி செய்வாரே அடைதல்கூடும். அக்கனியை உண்போர் உடம்பு மிகுதியும் பலம் பெற்று உறுதியுடன் விளங்கும். எந்நோயும் அவ்வுடலை யணுகாது. நீண்ட நாள் உலகில் வாழலாம். நீ தக்கபடி முயன்றால் அக்கனிகளைப் பெறுவாய்" எனப்புகன்று அவனிடம் விடைபெற் றகன்றார்.

அதிகமான், அன்று முதல் அப்பிளவிருக்கும் இடத்தைக் கண்டுபிடிக்க முயன்று வந்தான். ஒரு நாள் பெரும் பிளவு ஒன்றைக் கண்டான். அம்மம்ம! அச்சரிவில் தவறிப் படிந்தவன் பாதலம் புக்கொழிவான். அதன் இடை இடையே

முட்புதர்கள பல உள. அவற்றுள் சிக்குண்டவன் உடல், சல்லடைக் கண்களே யாகும். இவ்வளவு அபாயம் உள்ள விடரில்தான் கருநெல்லி மரம் இருந்தது. அதிகமான் அம் மரத்தைக் கண்டதும் அளவிலா ஆனந்தம் கொண்டான். கனியைப் பெறுதலையே பெரு நோக்கமாகக் கொண்ட அவன் ஆங்கிருந்த அபாயங்களுக்கு அஞ்சவுமில்லை; அவற்றைப் பொருட்படுத்தவுமில்லை. அவன் சிறந்த வீரனும், தீரனுமாகையால் பக்குவமாய்ச் சரிவில் இறங்கினன்; மரத்தையடைந்தான்; அதன் கிளைகளைச் சுற்றிச் சுற்றிப் பார்த்தான். ஒரு கிளையில், இலைகளையுடைய ஈர்க்கின் கீழ் ஒரே ஒரு கனியிருக்கக் கண்டான்; மெதுவாக மரத்தின்மேல் ஏறி அதனை மிக மகிழ்ச்சியோடு பறித்துக்கொண் டிறங்கினன். பிறகு பிளவிலிருந்து வெளியே வந்து மலையினின்றிறங்கி வீடு நோக்கி வந்துகொண்டிருந்தான். வரும்வழியில் அப்பழத்தை அடிக்கொருமுறை எடுத்துப் பார்த்துக் கொண்டும், பேரறிஞர் கூறியபடி இது குணமுடையதாமா என்று எண்ணிக்கொண்டும் தனது மாளிகை அருகுற்றான். இது நிற்க.

வெளியூர் சென்றிருந்த ஔவையார், வழக்கப்படி அன்று அதிகமானைக் காண வந்தார். அவனுடைய ஆட்கள் அதிகமான் இல்லை என்றும்; வெளியில் போயிருக்கிறார் என்றும்; இன்னம் சிறிது நேரத்தில் வந்து விடுவார் என்றும் சொன்னார்கள். ஆயினும், ஔவையார்க்கு அதிகனில்லாத இல்லத்தில் உபசாரம் பெற விருப்பமில்லை. உடனே வெளியில் வந்தார். அவர்க்கு, நடந்து வந்த களைப்பு ஒருபாலும், அதிகனில்லாத் துயரம் ஒருபாலும் மிகுந்து அவரை வருத்தவே அவர் முகம் வாடலாயிற்று. பசியும் அதிகப்பட்டது. நடக்கவும் சக்தியற்றவராய் வெளியே இருந்த கற்பீடத்தில் அமரலானார்.

அச்சமயம் அதிகமான் தன் மாளிகையை அடைந்தான்; ஔவையாரைக் கண்டான்; முன்னையினும் முதிர்ந்த அன்பொழுக முகமலர்ந்து இன்சொற் பகர்ந்தான்; ஔவையாருடைய முகவாட்டத்தைக் கண்டான்; அவர் பசியினால் களைத்திருக்கிறார் என்றுணர்ந்து கொண்டான்; உடனே, தான் அரிதா முயன்று பெற்று வந்த அரிய கரிய நெல்லியங் கனியை அவர் கரத்திற் கொடுத்து "அம்மையே, நுங்கட் குற்ற நாவறட்சியால் பேச முடியவில்லை போலும்" என்று கூறி அக்கனியை உடனே உண்ணும்படி வேண்டினான். ஔவையாரும் பசியின் கொடுமையால் அவன் கூறிய வண்ணம் உடனே உண்டு களைப்பை யோட்டினார். பிறகு அவர், அவனைப் பார்த்து, "வள்ளலே! இக்கனி மிகமிக இனிப்பாயிருந்தது. இத்தகைய இனிப்பை எனது நா என்றுங் கண்டிலது. இது எங்குக்கிடைத்தது? எங்ஙனம் பெற்றாய்? இயம்புதி" என வினவினார். அதிகமான் அக் கனிகொணர்ந்த வரலாற்றை விளக்கமாகக் கூறிப் பின்பு "தெய்வீகப் புலமை வாய்ந்த அம்மையாரே! இக்கனியை யான் உண்ணுதற்கு விரும்பினேன் ஆயினும், அதனால், நான் உலகுக்குச் செய்யும் பயன் யாதுளது? தம்மைப்போன்ற அறிஞர் அருந்துவராயின் உலகோர்க்குப் பல நற்போதனைகளைச் செய்வதற்கு அது பெரிதும் பயன்படும். அதனை நோக்கியே இதனைத் தங்கட்கீய இசைந்தேன்" என்று நல்லுரை உரைத்தான். ஆ! ஆ!! என்னே! அவன் குணத்தின் மேன்மை. அதிகமானைப்போல் தனக்கென வாழாத் தகைமையாளனை இக்காலத்தில் காண்டல் அரிதினும் அரியதாகு மன்றோ?

ஔவையார், அதிகமான் கூறியவைகளைக் கேட்டதும் மிகவும் வியப்பும் விருப்பும் அடைந்து அவனைப் பார்த்து—

"வெற்றி தரும் கூரிய வாளேந்திப் போர்க்களத்தில் பகைவர் இறந்துபட வெட்டி வீழ்த்திக் கழலணிந்த வீரனே! வீர வளை (தோடா) அணிந்த பெரிய கையினையும், மிகுந்த ஆரவாரத்தைச் செய்யும் முரசினையும் உடைய அதியர்களுக்குத் தலைவனே! பகைவரை வெல்லும் வீரச் செல்வத்தை விளக்கும் பொன்னாற் செய்யப்பட்ட வாகைப்பூமாலையைப் பூண்ட அஞ்சியே! தொன்று தொட்டுப் புகழப்பட்டுவரும் நன்னிலைமையை உடைய பெரிய மலையின்மேல் உள்ள ஆழ்ந்த பிளவில் வளர்ந்த சிறிய இலைகளையுடைய கரிய நெல்லிமரத்தினது இனிய கனியை, மீண்டும் அத்தகைய கனியைப் பெறுதற்கு அரிதென்றும் கருதாமலும், அதனாற் பெறும் பெரும்பயனை எமக்கு முன்னதாகக் கூறுமலும் உன்னுள்ளத்துள் அடக்கிக் கொண்டு எமது சாதலை ஒழிக்க அளித்தாய். ஆதலால், பெருமையோனே! நீ, பால்போலும் வெண்மையான பிறைமதி, நெற்றிக்கு அழகாகப் பொலிவுறும் திருமுடியினையும், நீலமணி போலும் கரிய திருக்கண்டத்தையும் உடைய ஒப்பற்ற பரமசிவனைப் போல நிலை பெறுவாயாக"—என்று பொருள் படும் பாடல் ஒன்றைப் புகழ்ந்து பாடினார். அது வருமாறு:

"வலம்படு வாய்வாள் ஏந்தி ஒன்னார்
களம்படக் கடந்த கழல்தொடித் தடக்கை
ஆர்கலி நறவின் அதியர் கோமான்
போரடு திருவின் பொலந்தார் அஞ்சி
பால்புரை பிறைநுதல் பொலிந்த சென்னி
நீலமணி மிடற்று ஒருவன் போல
மன்னுக பெரும நீயே தொன்னிலைப்
பெருமலை விடரகத் தருமிசைக் கொண்ட
சிறியிலை நெல்லித் தீங்கனி குறியா

தாதல் நின்னகத் தடக்கிச்
சாதல் நீங்க எமக்கீத் தனையே"

என்பது. (புறம், 91)

அதிகமான், அயலார்க்கு உண்டாகும் அல்லலை எவ்வழியிலாயினும் அகற்றி, அதனால், அவர்கள் அடையும் மகிழ்ச்சியைக்காண்பதே தனக்குப் பேரின்பம் ஆகும் என எண்ணி இருப்பவன். ஆகையால், ஔவையார்க்கு ஆமலகம்அளித்து விட்டதைப் பொருட்படுத்தாமல், வழக்கப்படி களிப்புடனிருந்தான்.

அதிகமான், ஔவையாருக்கு அருங்கனி யளித்தசெய்தி தமிழ் நாடெங்கும் பரவிவிட்டது. அவனைப் புகழாதார் ஒருரினும் இலர் என்றே கூறலாம். அவன் பெற்ற பெருங்கீர்த்தி மூவேந்தர்க்கும் எட்டிற்று. அதனால், அவர்கள் முன்னையினும் மிகுந்த பொறாமை யுற்றார்கள்; ஒருங்கே ஓரிடத்தில் கூடினார்கள். தங்கள் முன் ஓர்சிற்றரசன் சீரிய இசையைப் பெறுவதைத் தடுக்கவேண்டும்; அல்லது அவனை ஒழிக்கவேண்டும் என்று முடிவு செய்து, அதற்கேற்ற ஆற்றம் நோக்கி இருந்தார்கள்.

குறுநில மன்னர்களுட் சிலரும், அதிகமானிடம் பொறாமை கொண்டிருந்தார்கள். அவர்களுள் மலையமான் திருமுடிக்காரி என்பவன் ஒருவன். அதனால், அவன் அதிகமானுக்கு மாறாக வேற்றரசரிடம் சென்று மித்திரபேதம் செய்து வந்தான். அச்செயல் எப்படியோ அதிகமானுக்கு எட்டிவிட்டது. உடனே, அதிகமான் தன் சேனைகளை மலையமாநாட்டுக்கு அனுப்பிப் பயமுறுத்தி அவன் கொட்டத்தை அடக்கினான்.

மற்றும், அக்காலத்தில் காஞ்சிமாபுரியைத் தொண்டைமான் என்னும் வேந்தன் ஆண்டு வந்தான். அவனும் அதிகமானிடம் மாறுபட்ட எண்ணம் கொண்டு போர்புரியக் கருதினன். அதுவும் அதிகமானுக்கு எட்டியது. உடனே, தன்னுயிரினும் சிறந்த ஔவையாரை யழைத்துத் தொண்டைமானுடைய பிள்ளைப்புத்தியைப் போக்கும்படி போதிக்குமாறு அனுப்பினன் அதிகமான். ஔவையாரும் புறப்பட்டுக் கச்சி நகரம் அடைந்தார். காஞ்சி வேந்தன், அவரைக் கண்டதும் கண்ணியமாய் வரவேற்று விருந்திட்டுப் பின்பு தன் பெருமையைத் தானே கூறிக்கொண்டே அவரை யழைத்துக்கொண்டு போய்த் தன் படைக்கலங்களைக் காட்டினன். அவற்றைக் கண்டதும் ஔவையார் அவனுடைய அறிவில்லா இறுமாப்பைப் போக்கவும், அதிகன்மேல் கொண்டுள்ள பகைமையை நீக்கவும், நல் லறிவுச்சுடர் கொளுத்தவும் விரும்பி உடனே அவனைப் பார்த்து,—

"இவ்வே, பீலியணிந்து மாலை சூட்டிக்
கண்டிரள் நோன்காழ் திருத்தி நெய்யணிந்து
கடியுடை வியனகர்; அவ்வே அவ்வே
பகைவர்க் குத்திக் கோடு நுதிசிதைந்து
கொற்றுறைக் குற்றில மாதோ வென்று
முண்டாயிற் பதங் கொடுத்து
இல்லாயின் உடன் உண்ணும்
இல்லோர் ஒக்கற் றலைவன்
அண்ணல் எங்கோமான் வைந்நுதி வேலே" (புறம் 95)

என்னும் இப்பாடலை அஞ்சாமற் பாடினர்.

இதன் பொருள்:—"வேந்தே! இந்த, உன்னுடைய வேல்கள்,மயிர்ப்பீலிகள் அணியப்பட்டும்;மாலைகள் சூட்டப்பட்டும்;

நெய் பூசப்பட்டும்; உடல் திரண்டிருக்க அழகுடன் செய்யப்பட்ட வலிமையான காம்புகள் சேர்க்கப்பட்டும்; பாது காவலை உடைய அகன்ற உன்னுடைய மாளிகையில் இருக்கின்றன. எந்நாளும், செல்வம் உண்டாயின் வறியர்க்கு உணவு கொடுத்தும், இல்லையாயின் உள்ளதனைப் பலரோடுகூட உண்ணும் வறியோருடைய சுற்றத்திற்குத் தலைவனாகிய தலைமையை உடைய எம்வேந்தன் அதிகமானுடைய கூறிய நுனியை உடைய வேற்களோ? என்றால்—அவை பகைவரைக் குத்துதலால் நுனியிலும் விளிம்பிலும் உள்ள கூரிய பாகம் முரிந்து, கொல்லன் உலைக்களத்திலுள்ள சிறிய கொட்டிலிடத்துள்ளன" என்பதாம்.

ஔவையார் இங்ஙனம் கூறிய வீரமொழிகளைக் கேட்டுத் தொண்டைமான் நடுக்குற்றான்; அதிகமான்மீது கொண்டிருந்த அழுக்காற்றை ஓட்டினான்; தன்னையும் ஓர் நண்பனாக ஏற்றுக் கொள்ளும்படி செய்ய ஔவையாரை வேண்டிக் கொண்டான். அவரும் அங்ஙனமே ஆகுக; என்றுரைத்து விட்டு விடை பெற்றுக் கஞ்சியை விட்டகன்றார்; அதிகமானிடம் சென்றார்; காஞ்சியில் நடந்த எல்லாவற்றையும் தெற்றெனச் சொற்றார். வள்ளலும் கவியரசியைப் பாராட்டிப் புகழ்ந்தான்.

அதிகமான்மேல் பொறாமை கொண்டிருந்த மூவேந்தரும் ஒன்றுகூடி, அதிகமானை அழிப்பதற்கு ஆலோசனை செய்து கொண்டிருக்கும் இடத்தில், எருமையூரன், இருங்கோ வேள்மான், திதியன், பொருநன் ஆகிய நான்கு குறுநில மன்னரும் தம் தம் சேனைகளுடன் அங்கு வந்து, தாங்களும் அதிகனிடத்துப் பகைமை கொண்டவர்கள் என்று கூறினார்கள். அதைக் கேட்டதும் மூவேந்தரும் பெரிதும் மகிழ்ந்தவ

ராய்த் தம்முடைய மூன்று சேனைகளை அவர்களோடு கூட்டித் தகடூரை முற்றுகை இடும்படி அனுப்பினார்கள். அவர்களும் அங்ஙனமே சென்று அதனை யோர் பக்கம் தாக்கலாயினர். எதிர்பாராத இச்செயலை யதிகமான் அறிந்து மிக்க வியப் படைந்தான்; ஆயினும், சிறியதும் அச்சம் கொள்ளாமல் தனது வீரரைத் திரட்டிச் சென்று எதிர்த்து, அவர்களைச் சிதறவடித்து, அவ்வெழு வேந்தர்கள் விருதுகளாகிய ஏழி லாஞ்சனைகளைப் பறித்துக்கொண்டான். அவர்களுள் இறந்த வர் போக, எஞ்சியவர் உயிர் மிஞ்சினால் போதும் என்று புறங் காட்டி யோடினார்கள். அதிகனும் வாகை புனைந்து மாளிகை யடைந்தான். அப்போதுதான், அதிகமான் இல்லாள் ஓர் ஆண் மகவை ஈன்றாள். அதிகமான் அருமந்த தன் சேயைக் கண்ட பின்னும் கோபம் தணியாதிருந்தான். அதனைக் கண் டிருந்த ஔவையார், உடனே

"கையது வேலே காலன புனைகழல்
மெய்யது வியரே மிடற்றது பசும்புண்
வட்கர் போகிய வளர்இளம் போந்தை
உச்சிக் கொண்ட ஊசிவெண் டோட்டு
வெட்சி மாமலர் வேங்கையொடு விரைஇச்
சுரியிரும் பித்தை பொலியச் சூடி
வரிவயம் பொருத வயக்களிறு போல
வின்னு மாறாது சினனே யன்னோ
உய்ந்தன ரல்லரிவ னுடற்றி யோரே
செறுவர் நோக்கிய கண்டன்
சிறுவனை நோக்கியும் சிவப்பானவே." (பு - 100)

இதன்பொருள் :—"பகைவர் தொலைதற்கு ஏதுவாகிய, வளரும் இளைய பனையினது உச்சியிலே வாங்கிக்கொள்ளப்

பட்ட ஊசித்தன்மை பொருந்திய வெண்மையான தோட்டை யும் வெட்சியினது பெரிய மலரையும், வேங்கைப்பூவுடனே, விரவிச் சுருண்ட கரிய மயிர் பொலிவுபெறச் சூடிக் கையின் கண் வேலை ஏந்திக், காலின்கண் வீரக்கழலை யணிந்து, உடம்பு வேர்க்கவும், கண்டத்தில் ஈரம் புலராத பசியபுண்ணுண் டாகப் பகைவரை வெகுண்டு பார்த்த அதிகமானுடைய கண் கள், அவனுடைய இளஞ்செல்வனைப் பார்த்த பின்பும், முன்பு கோபத்தாற் பெற்ற சிவப்பிற் குறையாவாயின. ஆகையால், ஐயோ! இவனைச் சினப்பித்தவர்கள் பிழைத்தார் அல்லர்;" என்பது.

இங்ஙனம், அதிகமான், தனக்கு மகன் பிறந்த களிப்பை யும் கவனியாது பகைவர்மேற் கொண்ட சினத்தால், சித்தங் கலங்கி யிருந்தான். அதனைப் போக்க எண்ணிய ஔவையார், அவனைப் பார்த்து, "கொடையாற் சிறந்த பெருமையோனே! பெரிய யானை தனது வெள்ளிய கொம்பை ஊரிலுள்ள சிறிய பிள்ளைகள் கழுவும் பொருட்டு நீரையுடைய துறைக்கண் படிந்து, அவர்க்கு எவ்வாறு எளிதாய் இனிதாகுமோ அவ்வா றே எங்களுக்கு நீ இனியை; மற்றவ் யானையினுடைய, அணு தற்கு அரிய மதம்பட்ட நிலைமை எவ்வாறு இன்னாது ஆமோ அதுபோல நீ உன் பகைவர்க்கு இன்னாய்" என்று பொருட்ட ரூஉம் பாடலைப் பாடினார். அது,—

'ஊர்க்குறு மாக்கள் வெண்கோடு கழாஅலின்
நீர்த்துறை படியும் பெருங்களிறுபோல
இனியை பெரும எமக்கே; மற்றதன்
துன்னருங் கடாஅம் போல
வின்னாய் பெருமநின் னொன்னா தோர்க்கே"

என்பது. (புறம் 94)

அதனால், பின்பு அதிகமான் சினந்தணிந்து செவ்வனே இருந்துவந்தான்.

நம்முடைய நாட்டிற்குக் கரும்பை, இல்வதிகமானுடைய முன்னோரே, தேவர்களை வழிபட்டுக் கொணர்ந்தனர் என்று ஔவையார் ஓர் பாடலில் தெரிவிக்கின்றார். ஆகையால், அத் தொல்புகழ்க்கும் இவ்வதிகமான் உரியவனேயாயினன்.

ஔவையாரேயன்றிப் பரணர், பெருஞ்சித்திரனார், பொன்முடியார் முதலிய பெரும்புலவர்களும் புகழ்ந்து பாடும்படி, அதிகமான், தன்னுடைய அரிய, சீரிய குணங்களால், குடிகளை அன்புடன் ஆதரித்து ஆண்டுவாழ்ந்தான்.

ஔவையார் கரு நெல்லிக் கனியுண்ட வரலாற்றை வேறு விதமாகவும் கூறுவர் சிலர். அது, சங்க நூற்களில் யாண்டும் காணப்படவில்லை; ஆயினும், பிற்காலத்தில் எழுந்த சில தனிப்பாடல்கள் மூலம் அது வழங்கி வருவதால் அதனையும் அடியிற் காட்டுகின்றோம்.

பந்தன் என்னும் ஓர் வணிகன், காவிரிப்பூம்பட்டினத்தில் வாழ்ந்து வந்தான். அவன் மிகுந்த செல்வமுடையவன். அவன் பல கப்பல்களை வைத்திருந்தான் ; அதன் மூலமாகத் தன் நாட்டுப் பண்டங்களை அயல் நாடுகளுக்குக் கொண்டுபோய் விற்றுப் பொருளீட்டுவான். அவ்வழக்கப்படி ஒரு நாள் அவன், மிகுந்த விலையுள்ள பொருள்களைச் கப்பலில் ஏற்றிக் கொண்டு, கடற்பயணம் செய்தான். கப்பல் நடுக்கடலை அடைந்தது.

பந்தன் குணத்தைப் பரிசோதித்து, அதை உலகுக்குக் காண்பிக்கச் சில காலமாகத் தக்க சமயத்தை எதிர்பார்த்திருந்தான் ஆதிசேடன். அதனால், ஆதி சேடன் உடனே அக் கப்பலருகே வந்து, தன் கைகளுள் ஒன்றை நீர்மட்டத்திற்கு மேல் நீட்டினான். பந்தன் அதைக்கண்டு, தன்னை யாரோ யாசிக்கிறார்கள் என்றெண்ணித், தன் கப்பலிலிருந்து

சில பொருள்களை எடுத்துத் தந்தான். அதற்குப் பக்கத்தில் மற்றொரு கையை நீட்டினான் சேடன். அக்கை நிறையவும் பொருள்களைக் கொடுத்தான் பந்தன். உடனே, ஆதிசேடன் மற்றைய கைகள் அனைத்தையும் ஒருங்கே நீட்டினான். அது கண்ட பந்தன் சிறிதும் மனந்தளராமல் கப்பலில் இருந்த எல்லாப் பொருள்களையும் எடுத்து, ஒவ்வொரு கரத்திலும் வைத்தான். முடிவில் ஒரு கையில் வைப்பதற்குக் கப்பலில் பொருள் இல்லாமற் போயிற்று. உடனே, பந்தன் இல்லை என்னும் சொல்லைச் சொல்லாமல் வள்ளன்மையைக் காக்கத் தானே அக்கரத்தில் ஏறியமர்ந்தான். ஆதிசேடன், மிகவும் மகிழ்ந்து, பந்தனைத் தன்னகரம் கொண்டு போனான்; தனது பெண்களைத் திருமணம் செய்து கொடுத்தான்; சிலநாள் அங்கே வைத்திருந்தான்; பின்பு நாகரத்தினம், பீதாம்பரம் முதலிய வரிசைகளுடன், உண்டால் இறவாமல் இருக்கச் செய்யும் கருநெல்லிக்கனி யொன்றையும் கொடுத்துக் காவிரிப் பூம்பட்டினம் கொணர்ந்து விட்டான்.

பந்தனைக் காணுமல் வாடியிருந்த, அவன் சுற்றத்தாரும், மற்றோரும், அரசனும் அவன் வருகையைக்கண்டு பெரு வியப்பும், களிப்பும் கொண்டு வரவேற்றனர். அப்போது பந்தன், தான் கொண்டுவந்த அரிய நெல்லிக்கனியில் பாதியை அரசனிடம் கொடுத்து அதன் பெருமையை உணர்த்தினான்.

பின்பு, அப் பாதிக்கனியுடன் தன்னில்லம் சேர்ந்தான் பந்தன். பந்தன் பெருமையனைத்தும் அறிந்திருந்த ஔவையார் அவன்மீது, ஓர் அந்தாதியும், நவமணி மாலையும் பாடி, அவன் சமுகஞ் சென்று அரங்கேற்றினார். அவற்றைக் கேட்டு உள மகிழ்ந்த பந்தன் தன்னிடம் மீதமிருந்த பாதி நெல்லிக் கனியை ஔவையாருக்குக் கொடுத்துக் களிப்படைந்தான் என்பதாம். இங்ஙனம் பந்தன் கொடுத்த நெல்லிக்கனியை உண்டவர் இரண்டாம் ஔவையார் ஆக இருக்கலாம் என்பர் சிலர்.

# 2. ஆய

திருவளரும் நம்முடைய தமிழ் நாட்டில் பாண்டிய நாடே மிகவும் பெருமை பெற்றது. எங்ஙனமெனில், உலகில் தோன்றிய மக்களுக்கு முதன்முதல் இதுவே பகுத்தறிவைத் தோற்றியது; மக்கள்பேசுவதற்கு முதன்முதல் ஏற்பட்டதும், கடவுள்உண்மைக்கு எடுத்துக்காட்டாக இலங்கும்முறையைக் கொண்ட முதலெழுத்துக்களைப் பெற்றதும், இப்போது வழங்கும் ஏனைய மொழிகளைப்போல் கலப்புறாமல் தனித் தியங்கும் ஆற்றலையுடையதும், பிற எம்மொழியிலும் இல்லாத சீரிய இலக்கிய இலக்கணங்களை உடையதும், பல்லுயிரும் பல வுலகும் படைத்து அளித்துத் துடைக்கினும் ஓர் எல்லையறு பரம்பொருள் முன்னும் பின்னும் என்றும் இருப்பதுபோல், இன்றும் என்றும் இருப்பதுமான கன்னித்தண்டமிழ் மொழி யைப் பெற்றது; உழவு, வாணிகம், அரசு, அறிவு முதலிய வற்றின் தன்மைகள் இவை என்று உலகுக்கு முதன் முதல் எடுத்துக் காட்டியது; மற்றும், கடவுளது உண்மை இயல்பு இப்படிப்பட்டதென்று முதன்முதல் கண்டுபிடித்த மக்களைப் பெற்றதும் இந்நாடே என்றால் வேறு கூறவும் வேண்டுமோ?

இத்தகைய சீரும் சிறப்பும் வாய்ந்த பாண்டிய நாட்டில், சிறியதும், பெரியதுமான மலைகள் சில உண்டு. அவைகள் மேற்கு மலைத் தொடர்ச்சியைச் சேர்ந்தவையாகும். அவற்றுள் பொதியமலை என்பது ஒன்றுண்டு. அது தேவர்க்கும், முனி வர்க்கும், மக்கட்கும், அசுரர்க்கும் பொதுவானதாகையால் அப்பெயர் பெற்றது என்பர் பலர். அப்பெயர்க்கு அக்காரணம் பொருந்தாது. அதனிடத்தில் பல சிகரங்கள், மரஞ்செடி முதலியவைகள் பொதிந்து அதாவது நிறம்பி, குழுமி இருக்

கின்றமையால்தான் அது, பொதியமலை, பொதிகைமலை எனப் பெயர்கள் பெற்றது அதற்கு மலையமலை என்றும் மற்றோர் பெயர் உண்டு. வெயிற் காலத்தைக் குளிர்ச்சிக் காலம்போல் மிக்க இன்பமாய்க் கழித்தற்குத் தகுந்த நலம் பயக்கும் நீர் வீழ்ச்சியைக் கொண்ட திருக்குற்றால மலையும் அதன் தொடர்ச்சியே என்பர் அறிஞர்.

அம்மலையை அடுத்துள்ள நிலப்பாகத்திற்கு ஆய்நாடு என்று பெயர். அந்நாட்டில் பல காடுகள் உண்டு. அவற்றுள், சிலகாடுகளில் யானைமுதலிய பெரிய விலங்குகளும் வாழும். இப்போது, திருநெல்வேலி ஜில்லாவென்று பெயர்பெற்றுள்ள நிலப்பகுதியின் பெரும்பாகமே ஆய்நாடு என்றறிக. இக்காலத்தில் சில ஜில்லாக்களின் பெயர்களே அதனதன் தலை நகரங்களுக்கும் பெயர்களாக ஏற்பட்டிருக்கின்றன அல்லவா? அவ்வாறே ஆய்நாட்டின் தலைமை நகரத்தின் பெயரும் ஆய் என்பதே. ஆயினும், இரண்டிற்கும் வேறுபாடு தோன்றுதற்கு நகரத்தை ஆய்குடி என்றனர் ஆன்றோர். அந்நாடு, பொதியத்தில் பிறந்துவரும் தாம்பிரபரணி, கயிற்றாறு, சிற்றாறு முதலிய ஆறுகளால் நீர்வளமும் நிலவளமும் செல்வ நலனும் பெற்று விளங்கும். மற்றும், பகைவரால் எளிதில் வெல்ல முடியாத மலையரணையும் இயற்கையிலேயே பெற்றுமிருந்தது.

அந்நாட்டிற்குத் தலைவன் அண்டிரன் என்பவன். அது, அவனுடைய இயற்பெயர் ஆகும். அவன், ஆய்நாட்டிற்குத் தலைவனானதால், 'ஆய்' என்றும்; 'ஆய் அண்டிரன்' என்றும் பெயர்கள் பெற்றான். அவனுடைய முன்னோர் முதலில் நிலங்களைத்தாமே உழுதுண்டு வாழ்ந்து வந்தனர். பொதுவாகவே உழவுத் தொழில் செய்யும் மக்கள் எல்லார்க்கும் வேளாண்மாந்தர் என்றேபெயர். அப்பெயரே பின்பு வேளாண்மைக்காரர், வேளாளர் எனவாயிற்று. அவ்வே

ளாளர், உழுதுண்பேர் எனவும், உழுவித்துண்போர் எனவும் இருவகைப்படுவர். அவ்விருவகையினருள் ஆய், உழுவித்துண் ணும் வேளாண்குடியைச் சேர்ந்தவன் ஆவான். அவன், தான் பிறந்த வேளாண்குடிக்கு உரிய நற்குணம் நல்லொழுக்கம் முதலியன அமையப் பெற்று, அவற்றால், தனது குடிப்பெ யரை விளக்கினன். அதனால் அவனை அனைவரும் வேள்ஆய் என்றும், ஆய்வேள் என்றும் அழைக்கலாயினர்.

வேறுசிலர் அப்பெயருக்கு வேறுகாரணம் கூறுகின்றனர். அது வருமாறு:—

"அக்காலத்தில் அரசர்கள் தங்கள்சேனையில் சிறந்திருந்த வீரர்க்கும், சேனைத் தலைவர்க்கும் உழுவித்துண்ணும் சிற்றர சர்க்கும் அளித்த பட்டங்களில் 'வேள்' என்பதும் ஒன்று. ஆயும் வீரனாகவும், சிற்றரசனாகவும் இருந்தமையால் 'வேள்' என்னும் பட்டத்தைப் பெற்றான்" என்பதே.

இக்காரணமும் பொருத்தமுடையதே. ஆனால், மற் றோர் சாரார் கூறும் காரணம் பொருந்தாது. அது வரு மாறு:—

"ஒரு காலத்தில் அகத்தியர் தென்னாட்டிற்கு வந்தார். அவர் வரும்போது துவாரகைக்குப் போனார். அங்கே வேளிர் என்ற மக்கள் வாழ்ந்து வந்தார்கள். அவர்களுள் சிலரை அகத்தியர் தம்முடன் அழைத்து வந்தார். அவர்களே தமிழ் நாட்டில் ஆங்காங்குத் தங்கிக் காடுகெடுத்து நாடாக்கி வாழ்ந் தார்கள்; அவர்கள்தாம் வேளாளர் என்போர். அவர்கள் வழி வந்தவனே ஆய். ஆகையால்தான், அவன் ஆய்வேள் என்றும், வேளாய் என்றும் பெயர்கள் பெற்றான்" என்பது.

இது, ஏன் பொருந்தா தென்றால்? அகத்தியர் தமிழ் நாட்டிற்கு வருமுன்பே தமிழ் நாடு மிக்க செழிப்புற் றிருந்தது. தமிழரும் சிறந்த நாகரிகத்தைப் பெற்றிருந்தனர்.

அங்ஙனம் வாழ்ந்த மக்களில் உழவுத்தொழில் செய்தார் மிக்கிருந்தனர். 'உழுவார் உலகத்தார்க்கு ஆணி' ஆகலான், அவர்களை ஏனையோர் யாவரும் விரும்பிப் போற்றுவது இயல் பல்லவா? வேள் என்னும் சொல்லுக்கு விருப்பம் என்பது பொருள். உழவர் வேளைத்தருவார் என்றால், உயிர் வாழ்க் கைக்கு முதற் காரணங்களாகிய நல்ல இனிய உணவுப் பொருட்களை உண்டாக்கி ஏனையோர்க்கு அளித்து இன் பத்தை உண்டாக்குவர் என்பதே பொருள். அதனாலும், வேள் என்னும் சொல்லுக்கு மண் என்றும், உபகாரம் என் றும் வேறு பொருள்களிருத்தலால் அவ்விரண்டையும் என்றும் உடையர் என்னுங் காரணத்தாலும் வேளிர் என்ற பெயர் ஏற்பட்டு இருக்கலாம். எனவே, அகத்தியர் வருமுன் தமிழ் நாட்டில் வேளாண்மாந்தர் இருந்தனர் என்றறிக. அவர்களே துவரை முதலிய வட நாடுகளுக்குச் செல்வதும் மீள்வதுமா யிருந்திருந்தார்கள். இக்காலத்தில் பினங்கு, சிங்கப்பூர், ஆபிரிகா முதலிய இடங்கட்குச் சென்று மீளுதல் போல வாம். அங்ஙனம் சென்று மீண்டவர்களுடைய குடும்பத் திற்கு அவர்கள் எந்தெந்த நாடுகளுக்குப் போய் வந்தார் களோ, அந்தந்த நாட்டின் பெயர்களே வீட்டுப் பெயர்களாகத் தலைமுறைத் தலைமுறையாக இன்னும் கிராமங்களில் வழங்கு கின்றன. அதாவது கண்டியான் வீடு, நெடாலத்தான்வீடு போல்வன. அங்ஙனமே அந்நாளில் நம்முடைய நாட்டை விட்டு வெளியூர் சென்று அங்கு வேளாண்மை முதலிய தொழில்கள் செய்தும், தமது ஆற்றலால் அவ்வூர்களுக்குச் சிற்றரசராய் அமைந்து அரசு ஆண்டும் இருக்கலாம். அதனால் அவ்வூர் பழங்குடிகள் இவர்களைக் குறித்துப் பேசுங்காலத்தில் "வெளியூர்க்காரர், வேளாண்காரர்" என்று பேசியிருக்கலாம். அவையே திரிந்து வேளிர் என்று நிலைத்தும் இருக்கலாம். இதற்கு ஆதாரமாக இன்றும் மைசூர், ஆந்திரம், கேரளம்

முதலிய நாடுகளில் வேளகம், வேள்காம், வேள்பட்டி, வேளா புரம் என்னும் பெயர்களுடைய ஊர்கள் இருக்கின்றன என்று நேரில் கண்டுவந்த சில பெரியோர் கூறுகின்றார்கள். புறநானூற்றிலும் இதனை அறிவிக்கும் பாட்டொன்றுளது. அது வருமாறு:—பாரி இறந்தபின் அவனுடைய மகளிரை அவனுடைய உயிர்த்தோழனாயிருந்த புலவர் திலகராகிய கபிலர் அழைத்துக்கொண்டு, இருங்கோவேள் என்னும் அரசனிடம் சென்று, அம்மகளிரை அவனுக்கு அறிமுகம் செய்விக்கையில் அவர்கூறிய பாட்டில், அவ்விருங்கோவேளைப் பார்த்து,

“ நீயே வடபால் முனிவன் தடவினுள் தோன்றிச்
செம்பு புனைந்தியற்றிய சேணெடும் புரிசை
யுவரா வீகைத் துவரை யாண்டு
நாற்பத் தொன்பது வழிமுறை வந்த
வேளிருள் வேளே ”

என்று குறிப்பிட்டிருத்தலாலும் அறியலாம். இதன்பொருள் “நீதான் வடபக்கத்து முனிவனுடைய ஓமகுண்டத்தின் கண் தோன்றிச் செம்பாற் புனைந்து செய்தாலொத்த சேய்மையையுடைத்தாகிய நெடிய மதிலையுடைய துவாராபதி என்னும் படைவீட்டை ஆண்டு வெறுப்பில்லாத கொடையினையுடையராய் நாற்பத்தொன்பது தலைமுறை தொன்று தொட்டு வந்த வேள்களுள் ஓர் வேளாய் உள்ளாய்.”—என்பது. இது நிற்க.

வேள் ஆய், சிறுவனாக இருக்கையில் தன்னையொத்த சிறுவர்களிடம் அன்புடன் இருந்தான். அதுமட்டுமல்ல ஆடு, மாடு, கோழிமுதலிய பிராணிகளிடத்தும் மிக்க இரக்கமுடையவனாயிருந்தான். அவை, துன்பப்படக்கண்டால் தானும் துயரமடைவான். அத்துன்பத்தை நீக்கத் தனது இளமைக்கு ஏற்றபடி முயற்சித்து உதவி செய்வான். ஈ, எறும்பு, அணில்,

ஓணான், பூனை, நாய், முதலிய சிறு பிராணிகளை எவரேனும் அடிக்கக்கண்டால், அவர்களைச் சினந்து வைவான். பிறகு அவர்களை அவ்வாறு செய்யாமல் இருக்கும்படி இனியசொற் களைக் கூறி அவர்களை வேண்டிக்கொள்வான். தான் ஏதே னும் உண்ணும் சமயத்தில் எந்தப் பிராணி வந்தாலும் அதற் கும் இட்டு உண்பான். அவற்றால் அவனை அப்போதே அனை வரும் புகழ்ந்து பாராட்டினார்கள். நல்ல நேசமும், நற்பழக்க மும் இளமையிலிருந்தே ஆய்க்கு ஏற்பட்டு வந்தமையால் அவனது உடல் வளர்ந்தது போல் நற்குண நல்லொழுக்கமும் அவனிடம் வளர்ந்து வந்தன.

"அறம் பொருள் இன்பம் வீடும் பயக்கும்
புறங்கடை நல்லிசையும் நாட்டும்—உறுங்கவலொன்
றுற்றுழியும் கைகொடுக்கும் கல்வியினூஉங் கில்லை
சிற்றுயிர்க்கு உற்ற துணை"

என்று கூறப்படும் கல்வியின் பெருமையை ஆய், தன் இளமை யில் உணரவில்லை. ஆயினும், மக்களாய்ப் பிறக்கும் ஒவ்வோ ராணும் பெண்ணும் செயற்கை அறிவாகிய கல்வியறிவைப் பெறுவதற்குக் கண்டிப்பாய்ப் படிக்கவேண்டும் என்று எண்ணு வான். அவனுடைய பெற்றோரும் அங்ஙனமே எண்ணினர். இக்காலத்தில் கிராமங்களில் வசிப்பவர்களில் பெரும்பான்மை யோர் நிலபலன் முதலிய செல்வம் உடையவர்களாக இருந்தும் தம்மக்களைப் படிக்கவைக்காமல் மூடராக்குகிறார்கள். யாரே னும் தூண்டிச் சொன்னாலும் ஏரடிக்க ஆளில்லை, மாடுமேய்க்க ஆளில்லை; கடலைவெட்ட ஆளில்லை என்றும், படித்து விட்டால் வேலைகள் செய்யார்கள் என்றும், பாகப்பிரிவினை செய்யுங்காலத்தில் சட்டம் பேசுவார்கள் என்றும் கூறுகிறார் கள். அந்தோ! இவ்வறியாமையை யாம் என்னென்று கூறு வோம். சில மக்கள் கல்விநலம் பெற்றுச் சிறந்து ஓங்கி வரு

வதைக் கண்ணாரக்கண்டும் பெரும்பாலோர் உறக்கமும் தயக்கமும் கொள்ளல் இக்காலத்திற்குச் சிறிதும் பொருத்த மன்று. ஆகையால், பெரியோரே! எளியோரே!! செல்வர் களே!!! எப்பாடுபட்டாயினும் உங்கள் மக்களைப் படிக்கச் செய்யுங்கள்; அறிவுக்கண்ணைத் திறந்து விடுங்கள். படித்தால் தான் பிற்காலத்தில் உங்கள்மக்களுக்குப் பெருமை ஏற்படும். இங்கே, இச்சரித நாயகனைக் கவனியுங்கள். அவன் கல்வியின் சிறப்பை உணராத காலத்திலேயே சிறு நீதிநூல்கள் முதல் பெருங் காப்பியங்கள் வரையில் இலக்கணத்துடன் முறையே படிப்படியாகக் கற்றுத் தேர்ந்தான்; கற்றபின் அவற்றை ஆராய்ந்து, ஐயமறப் பல புலவர்களிடம் கேட்டுத் தெளிந் தான்; கற்றபடி ஒழுகியும் வரலானன்.

இங்ஙனம் அவன், கல்வி கேள்விகளால்பெற்ற செயற்கை அறிவென்னும் நெய், அவனுடைய இயற்கை அறிவென்னும் வேள்வித்தீயில் கலந்தவுடனே அருங்குண மென்னும் ஒளி, வெளிப்பட்டு மிக்க எழிலுடன் இலங்கி, குன்றின்மேல் இட்ட நந்தா விளக்கேபோல் யாவர்க்கும் தோற்றியது.

அவ்வாறு இயல்பான நல்லுணர்ச்சியுடன் நுட்பமான நூலுணர்ச்சியும் பெற்றபின் ஆய்வேள்,

> துகடீர் பெருஞ்செல்வம் தோன்றியக்கால் தொட்டுப்
> பகடு நடந்தகூழ் பல்லாரோ டுண்க
> அகடுற யார்மாட்டும் நில்லாது செல்வம்
> சகடக்கால் போல வரும்.

என்று, ஆன்றோர் உரைத்தருளிய அறநெறியை உளத்திற் கொண்டவனாய், எவர் தன்னிடம் வந்து எதைக் கேட்பினும் இல்லை என்று சொல்லாமல், வருபவரின் சாதி மத பேதங்

களைக் கவனிக்காமல், ஒரு சிறிதும் கைம்மாறுகருதாமல், அவர்கள் மனம் மகிழும்படி நல்லுதவி செய்து வந்தான்; மேலும் புலவர்களைத் தன்னுயிர்போல் பாவித்து ஆதரித்து வந்தான். அவனுடைய அன்புக்குப் பாத்திரமாய்ப் புலவர்கள் பலர் இருந்தார்கள். ஆயினும், அதிகமானுக்கு அவன் உயிரினுஞ் சிறந்த நண்பராய், எப்படி ஒளவையார் அமைந்து இருந்தாரோ, அப்படியே ஆய்வேளுக்கு ஏணிச்சேரி முடமோசியார் என்னும் புலவர் பொருந்தியிருந்தார். அவர் இவ்வாய்வேளின் கைம்மாறு கருதாத பெருங்குணத்தை

"இம்மைச் செய்தது மறுமைக்கு ஆமெனும்
அறவிலை வாணிகன் ஆஅய் அல்லன், பிறரும்
சான்றோர் சென்ற நெறி என
ஆங்குப் பட்டன்று அவன்கை வண்மையே"

என்று புகழ்ந்து பாடியுள்ளார். இதன் பொருள்:—

"உலகில் பண்டங்களை வைத்துக்கொண்டு வாணிகம் செய்கிறவர், அவற்றை வாங்க வருபவரிடம், தாம் கொடுக்கும் பண்டத்திற்குத் தகுந்த விலைகூறிப் பொருளைப் பெறுகின்றார் அல்லவா? அதனால் அவர்கள் உதவி செய்தவர்கள் ஆவார்களோ? ஒருவர்க்கொருவர் பணமோ பொருளோ ஏதோ, ஒன்றை ஒன்றுக்கு மாற்றிக் கொள்கிறவர்களே ஆவார்கள். அதுவும், தமக்கு ஊதியம் உண்டாக வேண்டும் என்ற நன்மையைக் கொண்டே மாற்றிக்கொள்கிறார்கள் அல்லவா? அங்ஙனமே, உலகில் தான தருமங்கள் செய்கிறவர்கள், அவற்றால், மறுமையில் தமக்கு இன்பம் கிடைக்கும் என்றும், மோக்ஷம் புகுவோம் என்றும் எண்ணித்தானே செய்கிறார்கள். அப்படி எண்ணிச் செய்கிறதால் அவர்களும் பணத்திற்காகப் பண்டம்

விற்கும் வாணிகருக்குச் சமானமே ஆகின்றார்கள். வணிகர் செல்வம் சேர்க்கப் பண்டங்களை விற்றல்போலவே, அறஞ் செய்கிறவர்கள் புண்ணியமாகிய செல்வத்திற்காக அறமாகிய பண்டத்தை விற்கிறார்கள். ஆனால் ஆய்,

மேனுலகம் இல்லெனினும் ஈதலே நன்று
ஏற்றகை மாற்றாமை என்னானும் தாம் வரையாது
ஆற்றாதார்க் கீவதா மாண் கடன்—எனவும்

கூறும் நீதிப்படி நடப்பவன்.

அதாவது, அறஞ்செய்து புண்ணியம் பெற்றால் மோக்ஷம் கிடைக்கும் என்று கூறும் வேதம் முதலிய அறநூல்கள், முன் பின்னாக மாறி அறஞ் செய்வோர்க்கு மோக்ஷம் இல்லை என்று கூறினும், மக்களாய்ப் பிறந்தார்க்கு உரிய முதற்கடமை பிறர்க்குத் தம்மால் கூடுமான உதவியைச் செய்வதே ஆகும் என்பதை எண்ணி அதன்படி செய்து வந்தான்" என்பதே.

கைம்மாறு கருதாமல், இன்சொற் கூறி உதவி செய்த நம்முடைய ஆய்வேளைப் போலவே ஆங்கிலப் புலவர்களுள் ஒருவரான தாமஸ் கார்லைல் என்பாரும் தனது பதினன்காம் ஆண்டுமுதற் கொண்டே பிறர்க்கு உதவி செய்வதையே தன் கடமையாகக் கொண்டு வாழ்ந்தார். அதனால், அவர் இன்றும் ஆங்கிலேயராலும் பிறராலும் புகழப்படுகின்றார்.

மக்கள், அறிவினால் சிறந்திருத்தல் மட்டும் போதாது; உடற்பலத்திலும் சிறந்து இருத்தல்வேண்டும். சுவர் இருந்தால் தான் சித்திரம் எழுத முடியும் அன்றோ? அதைப்போலவே, உடல் பலமாயும் நோயின்றியும் இருந்தால் தானே அறிவாற்றலைப் பெறவும், அதனாற் சிறப்படையவும் கூடும். அந்த நன்னீதி மட்டுமல்ல, பொதுவாகவே ஒவ்வொரு பிராணியும் தனது

உடம்பிற்கும், தனது பொருளுக்கும் யாதொரு தீமையும் எவராலும் வாராவண்ணம் காத்துக்கொள்ள வேண்டு மல்லவா? ஒருவன் எவ்வளவு நற்செயல்கள் செய்துவரினும், ஒரு சிலராவது அவனைப் பார்த்து வெறுப்பார்கள். எல்லாருக் கும் நல்லனாகவோ, எல்லாருக்கும் பொல்லனாகவோ எவனும் உலகில் வாழமுடியாது. சிலர்க்கு நல்லனாயிருப்பவன் பலர்க் குப் பொல்லனாயும், பலர்க்கு நல்லனாயிருப்பவன் சிலர்க்காவது பொல்லனாகவுந்தான் இருக்கமுடியும். ஆகவே, ஒவ்வொரு வரும் உடல்வலி பெறவேண்டியது அவசியமல்லவா?

இந்த நன்னீதியையும் இளமையிலேயே நன்கு உணர்ந் திருந்தான் ஆய். அடிநாள்முதல் தேகப் பயிற்சியில் மிக்க விருப்பங்கொண்டு, அதை முறையே பயின்று, உடல்நல முற்றுச் சிறந்த வீரனுமானான். பின்னொருகாலத்தில், கொங்குநாட்டார் ஆயைப்பகைத்து அவன்மேல் போருக்கு எழுந்தார்கள். அப்போரில் ஆய், தனது உடல்வன்மையால் அக்கொங்கரை எதிர்த்துத் துரத்தியடித்தான். அவர்கள், மீண்டும் போருக்கு எழாவண்ணம் தோற்று, மேல் கடலுக் கப்பால் ஓடி ஒளித்தார்கள். அதனை முடமோசியார், அவன் கொடையுடன் சேர்த்துப் புகழ்ந்துள்ளார். அப்பாடல் வருமாறு:—

விளங்கு மணிக் கொடும்பூண் ஆஅய்! நின்னாட்
டிளம்பிடி யொருசூல் பத்தீனும்மோ?
நின்னும் நின்மலையும் பாடி வருநர்க்கு
இன்முகம் கரவாது உவந்து நீ அளித்த
அண்ணல் யானை எண்ணில் கொங்கர்க்
குடகடல் ஓட்டிய ஞான்றைத்
தலைப்பெயர்த்திட்ட வேலினும் பலவே. (புறம் 130)

இதன் பொருள்:—ஒளிவீசும் நவமணிகள் வைத்துச் செய்யப்பட்ட வளையம்போன்ற தோளணியை (தோடா) அணிந்துள்ள ஆயே! உன்னையும், உன் மலையாகிய கவிரத்தையும், உன் நாட்டையும் பாடிவரும் பாவலர்க்கு, நீ இனிய முகத்துடன் ஒளிக்காமல் கொடுக்கும் யானைகள் எண்ணில் அடங்கவில்லையே. அவ்வளவு யானைகள் உன்னிடம் உண்டோ? ஒரு கால் உன்னுடைய காட்டில் வாழும் யானைகள் மாத்திரம், தாம்கருப்பங் கொள்ளுங்காலத்தில், ஒரு முறைக்குப் பத்துக்கன்றுகள் பெறுமோ? இங்ஙனம் உன்போல் அளவிலாமற் கொடுப்போரை யான் யாண்டும் காணவில்லை. ஆகையால், உன் பரிசிலுக்கு அளவுகூற உவமை எனக்குக் கிடைக்கவில்லை. ஆயினும், நீ கொங்கு வேந்தரைத் துரத்தி அடித்தபோது, அவரும், அவர்கள் வீரரும் பயந்து தத்தம் கையிலேந்திய வேல்களை அமர்க்களத்தில் போட்டுவிட்டுச் சென்றார்கள் அன்றோ? அவ்வேல்களின் தொகையைவிடப் பன்மடங்கு அதிகமாம்''—என்பது.

பொதிய மலைக்கு அருகே ஆய்நாடு இருப்பினும், அம்மலை முழுதும் அண்டிரனுக்கு உரியதன்று. அதையடுத்து அந்நாட்டின் எல்லையில் கவிரம் என்னும் ஓர் மலையுண்டு. அதுமுழுதும் ஆய்வேளுக்குரியது. அது, மிகவும் உயர்ந்திருக்கும். அதன்மீது மேகங்கள் எப்போதும் படிந்திருக்கும். அதனால், அது என்றும் குளிர்ந்தே இருக்கும். அதன் பல விடங்களில் பலவகைத் தாவரங்கள் வளர்ந்து படர்ந்து செழித்துப் பச்சைப் பசேலென விளங்கும். அதன் சரிவில் சந்தன மரங்கள் வரிசை வரிசையாகவும், கும்பல் கும்பலாகவும் வளர்ந்தோங்கி இருக்கும். கவிரத்துக்குப் பக்கத்தில்தான் ஆய்க்கு உரிய பெரிய காடுளது. யானைகள் பெருகி வாழ்வதற்கு அது,

சாலத்தகுந்ததாயிருந்தது. ஆகவே ஆய் தன்னிடம் வரும் பரிசிலர்க்கு மலைப்படுபண்டம், காடுபடுதிரவியம் முதலியவைகளையே கொடுப்பது வழக்கம். ஆயினும், அவன், அதிகமாக யானைகளையே கொடுத்து மகிழ்வான் ; அச்செயலை முடமோசியார்,

"மழைக்கணஞ் சேக்கும் மாமலைக் கிழவன்
வழைப்பூங் கண்ணி வாய்வாள் அண்டிரன்
குன்றம் பாடின கொல்லோ
களிறுமிக உடைய இக்கவின்பெறுகாடே"

என்றும் ;—

"...............
தீஞ்சுளைப் பலவின் மாமலைக் கிழவன்
ஆஅய் அண்டிரன் அடுபோ ரண்ணல்
இரவலர்க் கீத்த யானையிற் கரவின்று
வான மீன்பல பூப்பின் ஆனது
ஒருவழிக் கருவழி யின்றிப்
பெருவெள் ளென்னிற் பிழையாது மன்னே"

என்றும் புகழ்ந்து கூறியுள்ளார்.

இவற்றின் பொருள்:—"மேகக் கூட்டங்கள் சென்று தங்கும் உயர்ந்த மலைக்குத் தலைவனும், சுரபுன்னைப் பூவால் தொடுக்கப்பட்ட மாலையை அணிந்தவனும், கூர்மையான வாளினையும் உடைய அண்டிரனுடைய மலையையும், யானைகளை மிகுதியுமுடைய அழகிய காட்டையும் யாம் பாடினமோ ? இன்றுகாறு மில்லையே" என்பதும்;

"இனிய சுளையை உடைய பலமரங்கள் மிகுந்துள்ள பெரிய மலையைப் பெற்றுள்ள ஆய் அண்டிரன், கொல்லும் போரைச் செய்யும் தலைவன். அவன் இரவலர்க்குக் கொடுத்த

யானைத்தொகைக்கு ஈடாக அமைவது யாதெனின், மேகம் மறைத்தலின்றி ஆகாயம் பல மீனையும் பூக்குமாயின் அமையாது. அதன், ஓரிடத்தும் கரிய இடம் இல்லை என்று சொல்லும்படி வெண்மையாக்கும் மீன்கள் தொகையே ஒருவாறு ஒக்கும்'' என்பதுமாம்.

கவிரமலை, எவராலும் அழிக்க ஒண்ணாத வலிமையான அரணையுற்றிருந்தது ஆய்க்கு அதன்மீதும் ஒரு மாளிகை இருந்தது. வெயிற்காலத்தில் தங்குவதற்கே அது அமைக்கப்பட்டது. அதனைச் சூழ்ந்து தண்ணறுஞ் செடிகள் பல இருந்தன. பன்னிற மலர்கள் தரும் கொடிவகைகள் இருந்தன. அச்செடியும், கொடியும், மலரும் காண்பார் கண்கட்கு இனிய குளிர்ந்த காட்சியை நல்காநிற்கும்.

அவ்வழகிய இடத்தில் ஆய்வேள் தங்கி இருக்கும் காலத்தில ஒருநாள், அவன் ஆருயிர் அன்பரான ஏணிச்சேரி முடமோசியார் என்னும் புலவர் பெருமான், பாணர்கள் வாழும் இடத்திற்குப் போனார். அவர் வருகையைக்கண்ட பாணர்களும்பாணத்திகளும் எதிர்கொண்டழைத்துப் போற்றினார்கள். பாண வகுப்பு ஆண்களும் பெண்களும் பாடுவதில் மிகவும் சிறந்தவர்கள். அச்சக்தி அவர்கட்கு இயல்பாகவே அமையும். ஆகவே, அவர்கள் மோசிப்புலவரைப் பல பாடல்கள் மூலம் புகழ்ந்தார்கள். அப்புகழுரையுள் ஆயும் சேர்க்கப்பட்டான். புலவர் பெருமானும் அன்புடன் அவர்களை வாழ்த்தினார்; அவர்களோடு அண்டிரனைப்பற்றி அளவளாவினர். அப்போது ஒருத்தி, எழுந்து அவர் முன்வந்து, "அந்தணப் பெரியோய்! மேகமும் நானும் கைவண்மையுடைய ஆயினது ஆருயிரன்ப! யான் நும்முயிர்த்தலைவன் அண்டிரனுடைய புகழுடம்பைச் செவிப்புலனால றிந்துளேன்; அவனு

டைய ஊனுடம்பையும் கட்புலனுலறிய விழைகின்றேன். அதற்குத் தாங்கள் துணைசெய்வீர்களாக" என்று வேண்டிக் கொண்டாள்.

அங்ஙனம் வேண்டிய அப்பெண்ணுடன், முடமோசியார் ஆய்குடி சென்றார்; அப்போது ஆய், மலைமீதிருப்பதாக அறிந்துகொண்டார்; மலைமீதேறினர். அப்பெண்ணும் மிக்க வருத்தமுற்று ஏறினள். இருவரும் மேலிடம் சேர்ந்தார்கள்; ஆயைக் கண்டார்கள். ஆயும், தன்னுயிர் நண்பரைக் கண்டான்; எதிர்கொண்டு வரவேற்றான். 'இப்போது உங்களுக்கு வேண்டியது என்ன? தங்கள் கால், வலி கொள்ளும்படி இதன்மீது ஏறி வராமலேயே தங்கட்கு வேண்டிய பொருளைக் கீழிடத்திலேயே கொள்ளலாமே' என இனிய உரை பகர்ந்தான். அதனைக்கேட்ட புலவர் பெருமான் அவனைப்பார்த்து:—

"என்னுடைய இறைவனே! புலிகள் நடமாடும் உயர்ந்த சிகரத்தைப் பெற்ற பெரிய உன்மலைமீது ஏறுதற்குள்ள, கரும்பிளவாகிய சிறிய வழியை ஏறிக்கடந்ததால், உடல் வளையப் பெற்றவளும், மெல்ல அடியிட்டு நடக்கும் நடையினை உடையவளும், வளையையணிந்த கையை உடையவளுமாகிய விறலி என் பின்னே வரவும்; நிலந்தோறும் மாறி மாறி ஒலிக்கும் பயன்பொருந்திய சிறிய யாழை ஒரு மருங்கில் அணைத்துக் கொண்டும் புகழ்தற்கமைந்த தலைமையை உடைய நினது நல்லிசையை எண்ணிவந்தேன். எந்நாளும் பரிசிலரைக்காணின் கன்றுடனே யானைகளை அணியணியாகச் சாய்த்துக்கொடுக்கும் மலையை உடைய நாடனே! மாவேளாகிய ஆயே!! யாம் வேண்டியது யானையுமன்று; குதிரையுமன்று; விளங்கும் பொற்படையுடைய குதிரைகள் பூட்டப்பெற்ற தேருமன்று;

யாம் வந்தது உன்னைக் காணும்பொருட்டே. பகைவர் மாறு பாட்டை வென்ற வலியுடைய, யாவரும் ஒப்பப்புகழும் நாட்டையுடையோய்! உன்னுடைய பொருள்களைப் பாணரும், புலவரும், கூத்தருமாகிய பல இரவலர்கள் தம்முடையபொரு ளென வளைத்துக்கொள்வார்களாயின், நீ அவற்றை எம் முடையனவென்று மீண்டும் கைக்கொள்ளுதலை, உன் வாழ் நாட்களில் அறியாயே. அத்தகைய உன்னருங்குணத்தை யான் என்னென்று புகழ்வேன். வாழ்க நீ, ஓங்குக உன் னிசையே" என்று பொருள்படும் அழகிய பாடலைப்பாடினார்.

அவ்வாறு புலவர் கூறினாராயினும் ஆய்வேள், அப்பாண் மகட்கு வேண்டியவரை பொன்னும் பொருளும் அன்புடன் அளித்தான். அவள், அவற்றைக் களிப்புடன் பெற்றாள்; மலை ஏறிய வருத்தத்தை மறந்தாள்; மீண்டிறங்கித் தன்னூர் போய்ச் சேர்ந்தாள். அங்கே, அவள் இனத்தார் பலர், அவளைச் சூழ்ந்து கொண்டனர்; ஆயைக் குறித்துப் பற்பல வினாக்கள் கேட்டனர். அவளும் அவற்றிற்குத் தக்க விடை கள் தந்தாள்; ஆயைப் புகழ்ந்து பேசினாள்; ஆயினது மலை, பாடன் மகளிரும் ஆடன் மகளிரும் அணுகுதற்கு எளிய தாகவும்; பெருமை பொருந்திய அரசர் அருகுதற்கு அரிய தாகவும் உளது என்று வியந்தும் கூறினாள்.

ஓடை கிழார் என்பவர் ஒரு புலவர். அவரிடம் கலைமகள் கவினுற்றிருந்தாள். மலர் மகள் அவரை மறந்துவிட்டிருந்த னள். அதனால், அவரிடம் வறுமை குடிகொண்டிருந்தது. அவர், ஆயினது கொடைக் குணத்தைக் கேள்விப்பட்டார்; மிக்க துயரமுடன் ஆய் முன்னர் அடைந்தார்; அவனைக் கண்டு பின்வருமாறு மொழிந்தார். அது:— "பெருமை யோனே! உண்ணாமையால் உடம்பு வாடிக் கண் தெளிந்த

நீரால் நிறைந்து, வியர்ப்புற்ற எனது, பல சுற்றத்தோடு பசி நோய் வருத்தும் பகையை ஒரு பகை என்பேனோ? அப்படிப் பட்ட என் நிலைமையை அறியாமல் வழியிலிருந்து சூறங்கு களைப்போல் பறித்துக்கொள்ளும் ஆறலை கள்வர் பகையை ஒரு பகை என்பேனோ? மற்றும் உள்ளதுமாகிய எல்லாப் பகையும் அறிந்து அகற்றுவான் ஆயே எனக் கருதினேன்; உனது பெயரை எமது வாக்கினால் மிகவும் வாழ்த்தினேன்; உன் புகழை விரும்பி வெப்பம் மிகுந்த பாலைவனத்தைக் கடந்து வந்தேன். இவ்வாறு வறுமையுற்ற எம்போன்றார்க்கு ஒன்றை ஈவோரே பயன் கருதாது பிறர்க்கு இடுபவராவர். எம்மை யொழிந்த பிறர்க்கு இடுவோர் தங்களுக்கே இட்டுக் கொள்பவராவர் என அறங்கூறுவதை உனக்குச்சொல்கிறேன். நீ ஆராய்ந்து எனக்குப் பரிசில் அளிப்பாயாயின், உனது, ஆற்றுத்துறை முன்னர் உள்ள நுண்ணிய மணலினும் பல நாள் வாழ்கவென வாழ்த்தி நீ தரும் செல்வத்தை உண்பேம்,'' என்பது.

அப்புலவர் துன்பத்தை உணர்ந்த ஆய்வேள், அவர்க்கு ஆறுதல் கூறி, அவர் விரும்பிய பொருள்களை அன்போடு கொடுத்தனுப்பினான்.

இவ்வாறு ஆய், தன்னிடம் உள்ள பொருள்கள் எல்லா வற்றையும், நாடோறும் பரிசிலர்க்குக் கொடுத்துக்கொண்டே வந்தான். அதனால், அவனுடைய பொருட் செல்வம் வரவரக் குறைவுபட்டு, முடிவில் அவனுடைய மனைவியரது மாங் கல்யமே மிச்சமாயிற்று. ஆயினும், அவன் வீட்டில் மங்களம் குடிகொண்டிருந்தது. அதனை ஏணிச்சேரி முடமோசியார்,—

"களங்கனி யன்ன கருங்கோட்டுச் சீறியாழ்ப்
பாடின் பனுவல் பாணர் உய்த்தெனக்

களிறில வாகிய புல்லரை நெடுவெளிற்
கான மஞ்ஞை கணனொடு சேப்ப
வீகை யரிய விழையணி மகளிரொடு
சாயின் றென்ப ஆஅய் கோயில்
சுவைக் கினிதாகிய குய்யுடை அடிசில்
பிறர்க்கீ வின்றித் தம்வயி றருத்தி
உரைசால் ஓங்குபுகழ் ஒரீஇய
முரைசுகெழு செல்வர் நகர்போ லாதே"

என்னும் பாடலால் அறிவிக்கின்றார்.

இதன் பொருள்:—"களாப் பழம் போலும், கரிய கோட்டை உடைய சிறிய யாழைக்கொண்டு இனிய பாடல்கள் பாடும் பாணர்கள், பரிசில் பெற்றுப் போனமையால் யானைகள் இல்லையாயின. யானைகள் கட்டும் தறிகளின்மேல் மயில்கள் தத்தம் இனத்தோடும் தங்கலாயின. ஆயின் மனைவியர் அணிந்திருந்த அணிகலன்களும் இலவாயின. அவர்கள், கொடுத்தற் கரிய மங்கலிய சூத்திரம் ஒன்றையே அணிந்து விளங்குகின்றார்கள். அவர்களோடு ஆய், அன்புடன் வாழ்கின்றான். அந்நிலைமை வாய்ந்த அவனுடைய இல்லத்தைப் பொலிவழிந்து சாய்ந்ததென்று சொல்லுவார் அன்பிலார். உண்ணுதற்கு இனிதாகத் தாளிப்புச்செய்த உணவுப் பண்டங்களைப் பிறர்க்கு உதவாமல், தம்முடைய வயிற்றையே நிறைத்துக்கொள்ளும், போற்றற்கமைந்த புகழைப் பெறாத முரசு பொருந்திய செல்வத்தை உடைய அரசர் மாளிகை, ஆயின் கோயிலை ஒவ்வாது"—என்பது.

ஒரு படி அளவுள்ள பாலை நன்றாகக் காய்ச்சினால், அது, அளவில் குறைந்தாலும், இனிப்பில் அதிகப்படுமல்லவா?

அதைப்போலவே ஆயும், பொருட்செல்வத்தில் குறைவு பட்டானுயினும், அருட்செல்வத்தில் அதிகப்பட்டான். ஆகையால், அவன் தன்னிடம் வந்து ஏதேனும் கேட் போர்க்குப் பண்டுபோல் இல்லை என்னுமல் கொடுக்க மிகவும் முயன்றான். முடிவில் அவன், நாகநாடு புக் கான். நாக வேந்தன் ஆய்வேளுக்கு நண்பன். அதனுல் அவன், ஆயை வரவேற்று உபசரித்து, நல்விருந்திட்டான்; சின்னுள் கழிந்தபின், விலை உயர்ந்த ஆடை ஒன்றை அவனிடம் கொடுத் தனுப்பினுன். ஆய்வேள், அதனைப் பெற்றதும், "இதனுல் எனக்குப் பெரும்பொருள் கிடைக்கும். ஆகையால், இனி எனக்கு எஞ்ஞான்றும் குறைவில்லை. எவர் வரினும் வருக. யாது வேண்டினும் வேண்டுக. முன்னையினும் அவர்கள் மகிழ யாம் தருவல்.''—என எண்ணிக்கொண்டு மிகக்களிப்புடன் தன்னுடைய நாடு நோக்கி வரலானுன்.

பண்டைக்காலத்துத் தமிழ்மக்கள், ஆதியில் சேய், மால், முருகு, கந்தழி, முனைவன் என்ற பெயர்களால் கடவுளை வழி பட்டு வந்தார்கள். பின்பு சிவலிங்க வழிபாடும், மாயோன் வழி பாடும்செய்துவந்தார்கள். அவை, வர வர அதிகமாகப் பரவலா யின. அம் மக்கள், தத்தம் நிலப்பாங்குகளுக்கு ஏற்றபடி அவ் வழி பாடுகளைச் செய்துவந்தார்கள். அம்முறையுள் ஆய்வேள், சிவலிங்க வழிபாட்டைப் பெரிதும் விரும்பிப் போற்றிச் செய்துவந்தான்; சிவலிங்கத்தைக் கண்டு வணங்கிப் பூஜை செய்யாமல் ஒருநாளும் உண்ணுன்; உறங்கவுமாட்டான்; பிற பெயர்களால் கடவுளை வணங்கி வழிபடுவோரைக் கண்டிக்கவு மாட்டான்; அவர்கள் மனம்நோக வெறுப்புரைஒன்றும் கூறவு மாட்டான்; தன்னிடம் வருபவர்கள் தனக்கு மாறுபட்ட வழிபாடுகளை உடையவர்களாய் இருப்பினும், அவர்களை அன்

புடன் வரவேற்று அவர்கட்கு வேண்டிய உதவிகளைச் செய் வான். அந்தச் சமரச ஞானம்தான் அவனுடைய புகழுக்கு அடிப்படையான காரணமாகும். அவனுடைய நாக்கு இனிய சொற்களையே அன்றி, வன்சொற்களை ஒருநாளும் புகன்றி ராது. அதனுல் ஆய், "கீழோராயினும் தாழவுரை' என் னும் நீதி மொழிக்கு ஓர் எடுத்துக்காட்டாய் விளங்கினுன்.

இப் பெருங்குணமுடைய ஆய், அந்த ஆடையுடன் வரும் வழியில், ஓர் ஆலமரம் இருந்தது. அம்மரத்தின்கீழ் சிறிய மேடை ஒன்றிருந்தது. அதன் நடுவில் ஓர் சிவலிங்கம் ஸ்தாபிக்கப்பட்டிருந்தது. அச்சிவலிங்கத்திற்கு ஏதோ குறிப் பிட்ட சில நாட்களில்தான் பூஜைகள் நடைபெறும். ஆய் கண்டபோது, அதற்குப் பூசனை நடந்து பன்னுட்கள் ஆயின. அக்காலம் குளிர் மிகுந்த காலமாயிருந்தது. அதனுல் அது, பனிநீரால் நனைக்கப்பட்டிருந்தது. அங்ஙனம் இருந்த அச் சிவலிங்கப் பெருமானை, நம்முடைய ஆய்வேள் கண்டான். கண் டதும் உடல்சிலிர்க்க மனம் திடுக்கிடப் பெற்றுன். எங்கே னும் வழியில் ஏழை எளியர் எவரேனும் முகம்வாடி இருக்கக் கண்டால், தாளாது மனமுருகி உதவும் உயர்குணமுள்ளவனு கிய ஆய், தான் தன்குல தெய்வமாக ஏற்று, மிக்க அன்புடன் பூசித்து, வழுபட்டு வரும் சிவலிங்கத்தைக் கண்டால் மனம் உருகாதிருப்பனே? அதுவும் பூசனையின்றி இருப்பதைக் கண்டதும், அவன் மனம் எப்பாடு பட்டிருக்கும் என்பதை எடுத்துரைக்கவும் வேண்டுமோ? வாசிக்கும் நேயர்களே உணர்ந்து கொள்ளலாம்.

உடனே அவன் அச்சிவலிங்கத்தை அணுகி "அந்தோ! எனது அப்பன் குளிரால் வாடுகின்றுன்; பனியால் நனைகின் றுன். இவை, இவனை அணுகாமல் இருக்க என் செய்வேன்

நான் ?' என்று எண்ணி ஏங்கித், தான் மிக அருமையாகப் பெற்று வந்த,அவ்வாடையை அதன்மேல் போர்த்துவிட்டான். போர்த்தபின் அதைக்கண்டு மகிழ்ந்தான்; பின்னர் வீடு நோக்கிச் சென்றான். ஆ ! ஆ !! என்னே இவன் பக்தியின் பெருமை !!! எம்போலியரால் அதனை வருணிக்கத்தான் முடியுமோ ? அன்பர்களே ! ஒருகாலத்தில், திருக்காளத்தி மலைக்காட்டில் இருந்த குடுமித்தேவராகிய சிவலிங்கப் பெருமானைக்கண்டு, மனமுருகி உணவளித்த திருக் கண்ணப்ப நாயனாருடைய அன்பிற்கும், ஆய்வேளின் அன்பிற்கும் வேற்றுமை என்னவென்பதை உன்னிப்பாருங்கள். ஆய்வேள், அவ்வாடையின் மகிமையை அப்போது சற்றேனும் எண்ணினனோ ? அன்றி அது, அந்தலிங்கத்திற்கு அவசியம் வேண்டுமென்றேனும் எண்ணினனோ? இல்லை. அன்பில் ஈடுபட்டுள்ள பெரியோர், உறுதுயர் உற்ற ஒருவர்க்கு உதவுங்காலத்தில் வேறு ஒன்றையும் எண்ணார். அதிகமானும் ஒளவைக்கு அரிய நெல்லிக்கனியை இங்ஙனமே ஈந்தானன்றோ ? ஆயினது இவ்வருங்குணத்தைக் கடைச்சங்க நூல்களுள் ஒன்றான சிறுபாணாற்றுப் படையில் இடைக்கழிநாட்டு நல்லூர் நத்தத்தனார்

"..............................நிழல்திகழ்
நீலநாக நல்கிய கலிங்கம்
ஆலமர் செல்வற் கமர்ந்தனன் கொடுத்த
சாவந் தாங்கிய சாந்துபுலர் திணிதோள்
ஆர்வ நன்மொழி ஆய்...................."

என்று புகழ்ந்துள்ளார்.

இதன்பொருள்:—வில்லைத் தாங்கும் சந்தனம் பூசிப் புலரும் வலிய தோள்களையும், கேட்பவர்க்கு விருப்பத்தைக்

கொடுக்கும் இனிமையான சொற்களையும் உடைய ஆய் என்னும் வள்ளல், நாகவேந்தன் கொடுத்த ஒளி வீசும் நீல நிறமுள்ள உடையை ஆலின் கீழ் இருந்த இறைவனுக்கு மிக்க மகிழ்ச்சியோடு கொடுத்தான் என்பது. 'ஆலமர் செல்வன்' என்பது, ஆலிலைமீது துயின்ற திருமால் என்றும் பொருள்படும்.

பின்னர், சின்னாட் கழிந்தபின், பாணர் பாவலர் வறியர் எளியர் முதலியோர் மனமலர் வாடவும், அல்திணைப் பிராணிகள் அலைந்து அரற்றவும், விண்ணவர் விரைந்து மகிழ்ந்து வரவேற்கவும் காலனது வேலால் திடீரெனத் தாக்குண்டான்.

அவனுக்கு, ஒருத்திக்கு மேற்பட்ட மனைவியர் இருந்தனர். அவர்கள் அனைவரும் சீரிய கற்பினை உடையவர்கள். தமது நாயகனை தமது உயிர் என்றும், நாயகனைவிட வேறு கடவுள் இல்லை என்றும் எண்ணி வாழ்ந்து வந்தார்கள். ஆகையால், அவர்கள் யாவரும் தமது நாயகன் ஆருயிர் துறந்ததும், அவன் கூடவே உடன்கட்டை ஏறினார்கள்.

அவர்களைக் குறித்துப் புலவர் பலர், புகழ்ந்தும் வருந்தியும் பாடிய பாக்கள் சங்க நூற்களுள் மிகுதியும் உள்ளன. அவற்றைத் தமிழன்பர் ஒவ்வொருவரும் படித்துப் பார்க்க வேண்டும். அவற்றுள் சிலவற்றை அடியிற் காண்க.

"ஆடுநடைப் புரவியும் களிறுந் தேரும்
வாடா யாணர் நாடும் ஊரும்
பாடுநர்க்கு அருகா ஆஅய் அண்டிரன்
..................குறுந்தொடிமகளிரொடு
காலன் என்னும் கண்ணிலி உய்ப்ப

மேலோர் உலகம் எய்தினன் எனாஅப்
பொத்த வரையுள் போழ்வாய்க் கூகை
சுட்டுக் குவியெனச் செத்தோர்ப் பயிரும்
கள்ளியம் பறந்தலை ஒருசிறை அல்கி
ஒள்ளெரி நைப்ப உடம்பு மாய்ந்தது ;
புல்லென் கண்ணர் புரவலர் காணாது
கல்லென் சுற்றமொடு கையழிந்து புலவர்
வாடிய பசியர் ஆகிப் பிறர்
நாடுபட செலவினர் ஆயினர் இனியே.''

இப்பாடல், ஆய் இறந்தபின் குட்டுவன் கீரனார் என்னும் புலவர், இரங்கிப் பாடியது. இதன் பொருள்:—

ஆய் அண்டிரன், தன்னைப் புகழ்ந்து பாடும் பாணர்க்கும் புலவர்க்கும் இடத்திற்கு ஏற்றபடி தாவியும், விரைந்தும், அசைந்தும் நடக்கும் குதிரைகளையும், யானைகளையும், தேர்களையும், மேன்மேலும் புத்தம்புதிய பலன்களைக் கொடுக்கும் அழியாத ஊர்களையும் குறைவின்றிக் கொடுப்பான். அத்தகைய பெருங் குணமுடைய அவனிடம், சிறிதும் கண்ணோட்டமும் இரக்கமும் நடுநிலையும் இல்லாதவனாகிய காலன் வந்தான். அப்போதே ஆய், தன் உயிர்போன்றவரும், சிறிய வளையல்களையும் தோளணியாகிய தொடியையும் (கடகம் அல்லது வங்கி) அணிந்துள்ளவரும் ஆகிய அழகிய மனைவியருடன் அக்காலன் பின் தொடர்ந்து மேலோர் உலகம் சென்றான். அதனை அவனுடைய மலையின் ஓர் பொந்தில் வாழ்ந்திருந்த பேராந்தை கண்டது. கண்டதும் சொல்லொணாத் துயரமடைந்தது. பின்பு 'அந்தோ ! எமது இறைவன் எமது நாட்டை விட்டு இறக்கவும் கண்டு, நான் உயிரோடு இருப்பேனோ? ஒரு கண

மும் இரேன்'—என்று எண்ணி விரைந்து பறந்துசென்று, செத்தோரை அழைப்பதுபோலக் கூவிக்கொண்டு, கள்ளி மரங்களை உடைய வெப்பம் மிகுந்த சுடுகாட்டை அடைந்தது; அங்கு எரியும் தீயில் தன் உடல் வேக உயிர் விட்டது. பாவலரும், அறிஞரும் தம்மைப் பாதுகாக்கும் இறைவனைக் காணப் பெறாமையால், பொலிவற்ற கண்களை உடையவராய்ச் செயலற்று, அழுகின்ற தம் மனைவி மக்கள் சுற்றமுடன் பசியினால் உடம்பு வாட அயல் நாடுகளுக்குச் சென்றார்கள் என்பது.

“ திண்டேர் இரவலர்க் கீத்த தண்டார்
அண்டிரன் வரூஉ மென்ன வொண்டொடி
வச்சிரத் தடக்கை நெடியோன் கோயிலுட்
போர்ப்புறு முரசங் கறங்க
வார்ப்பெழுந் தன்றால் விசும்பினானே.”

இப்பாடல் ஏணிச்சேரி முடமோசியார் அவன் இறந்த போது மனம் வருந்திப் பாடியதாகும். இதன் பொருள் :—

ஆய், இரவலர்க்கு உறுதியான நல்ல தேர் முதலிய உயர்ந்த பொருள்களைக் கொடுக்கும் குளிர்ந்த அருள் மாலையை உடையவன். அத்தகைய பெரியோன் நமது நாட்டிற்கு வருகின்றான் என்று, ஒளிவீசும் தொடியையும், வச்சிராயுதத்தை ஏந்தும் நீண்ட கையினையும் உடைய இந்திரன், ஆரவாரத்துடன் எதிர்சென்று ஆயை வரவேற்றான். அம் முரசொலி வானமெங்கும் பரவிப் பொருந்தியது—என்பதாம்.

இங்ஙனம், இந்திரன எதிர்கொண்டு அழைத்தான் என்று, புலவர் பெருமான் கூறியதில் மிகை ஒன்றுமில்லை.

" செய்யாமற் செய்த உதவிக்கு வையகமும்
வானகமு மாற்ற லரிது "—என்றும்,
" தானமும் தவமும் தான்செய்வ ராயின்
வானவர் நாடு வழிதிறந் திடுமே"—என்றும்,

ஆன்றோர் அறநூல்கள் கூறுகின்றன. ஆகையால், ஆயின் அருங்குணத்தை எவ்வளவு வேண்டுமாயினும் புகழ்ந்து கூறலாமன்றோ? அவன் புகழ் ஓங்குக.

## ✻3. நள்ளி

நம்முடைய இந்தியாவின் தெற்கே இருக்கும் நிலப்பகு திக்குத் தென்னாடு என்பது பெயர். தென்னாட்டிலும் தெற்குப் பக்கமாய் இருப்பதைப் பாண்டியநாடு என்பர். பாண்டியர் என்றால் பழையோர் என்பது பொருள்; அதாவது தென்னாட்டின் பழங்குடிகள் என்பதாம். அப்பண்டையோரே முதன் முதல் அந்த நிலப்பகுதியை ஆண்டுவந்த காரணத்தால் அது, அப்பெயர் பெற்றது.

அது, நீர்வளம் நிலவளம் முதலியவற்றுள் மிகவும் சிறப்பும் சீரும் பெற்றது. அந்நாட்டில், பெருமலைகளும், சிறு மலைகளும் பல உண்டு. அவற்றுள் உயர்ந்த ஓர் மலையின்மேல் மேகங்கள் எப்போதும் தவழ்ந்துகொண்டே இருக்கும். அதனால், அம்மலை என்றும் குளிர்ச்சியாகவே இருக்கும். குளிர்ச்சியை அந்நாள் மக்கள் 'நளி' என்று சர்வ சாதாரணமாகச் சொல்வார்கள். அதனால், அவர்கள் அந்த மலைக்கு நளிமலை என்று பேரிட்டார்கள்.

மற்றும், மாலைவேளையில் பாடும் ஓர் பண்ணோசைக்கு நள் என்னும் பெயர் உண்டு. அம்மலையிலிருந்து அருவி நீர், இறங்கி ஓடும்போது 'நள்' என்னும் ஓசை உண்டாக்கும். அதனால், அம்மலைக்கு நள்ளிமலை என்னும் பெயர் உண்டாயிற்று என்றும் கூறுவர் சிலர். ஆகவே, அதனை அடுத்து மருவியுள்ள நிலப்பாகத்திற்கு நள்ளியூர் எனப் பெயராயிற்று. அதற்கு, மற்றோர்பக்கம் தோட்டி யென்னும் வேறோர் மலையும் உண்டு. அம்மலைக்குப்பக்கத்தில் இருந்த நிலப்பாகம் பெரிய காடு அடரப்பெற்றது. அக்காட்டு நாட்டிற்கும், அவ்விரு மலைக்கும் இடையேயுள்ள மலைநாட்டிற்கும் உரியவன் ஒரு

வன், நள்ளியூரில் வாழ்ந்து வந்தான். அவன் எல்லாரி டத்தும் மிக அன்பாய் இருப்பான். சாதி, மத வேறுபாடுகளை ஒரு சிறிதும் ஓரான்; உயர்வுதாழ்வு முதலிய அந்தஸ்துகளை யும் கவனியான்; அனைவரிடத்தும் ஒரே தன்மையதாக நள்ளு தல் செய்துவந்தான். நள்ளுதல் என்பது நட்புச்செய்தலாம். அந்தக்காரணத்தாலும், அவன் நளி மலைக்கு உரியவனாய் இருந்த காரணத்தாலும் அவனுடைய இடுகுறிப்பெயர் மறைந்து, நள்ளி என்னும் சொல்லே அவனுக்குப் பெயராய் ஏற்பட்டுவிட்டது. அப்பெயரை அமைத்தே புலவர்கள்பலரும் அவனைப் பலபடி பாராட்டிப் புகழ்ந்து பாடி உள்ளார்கள்.

அவன், பிறர் பசித்திருக்க ஒருபோதும் பார்த்திருக்க மாட்டான்; உடனே அவர்கட்கு வேண்டிய உணவை இட்டு, அவர்களுடைய பசிப்பிணியைப்போக்கி, மற்றும் வேண்டு வன கொடுத்தனுப்பும் இரக்கமுடையவன்; தன்னைப்புகழ்ந்து பாடிவரும் புலவர்கட்கும் அவர்கள் மனம் மகிழும் வண்ணம் ஈத்துண்ணும் ஈகையாளனாய் இருந்தான்.

அவன், தனது தாய்மொழியாகிய தமிழ்மொழியில் மிக வும் பற்றுடையவன்; அரிய தமிழ் நூல்களை ஆராய்தலையே தனக்கு விநோதமாகக் கொண்டவன்; பெரியோர் கூறும் அறந்திரியா மொழிகளைத் தலைமேல் தாங்கி அவற்றின்படி நடப்பவன்; ஆயினும் சிற்சில சமயங்களில் ஏதாவது தவறு செய்து விடுவான்; அதனை எவரேனும் எடுத்துக்காட்டினால், அக்குற்றத்தைஒப்புக்கொண்டு, மீண்டும் அதனைச் செய்யாமல் தன்னைக் காத்துக்கொள்ளும் ஊக்கமும் அன்பும் உடைய வனாய் இருந்தான்.

ஆனை முதலில் அதிகம் செலவழித்து விட்டால், பின்பு மிகவும் துன்பப்படவேண்டும் என்பதை, நள்ளி நன்கு உணர்ந் திருந்தான். ஆயினும்,

"கொடையே எவர்க்கும் எப்பேறும்
கொடுக்கும் நெறியின் பிறழாத
கொடையே யாரும் தன்வழியின்
ஒழுகச் செய்யும் குறைதீர்ந்த
கொடையே பகையை உறவாக்கும்
குலவும் பூதம் அனைத்தினையும்
கொடையே புரக்கும்..............."

—என்று பெரியோர் கூறும்

கொடையின் மேன்மையை நன்கு உணர்ந்தவன் ஆகையால், அவன், தனது வருவாயைத் தக்கபடி வகுத்துத் தன்னிடம் வந்து நட்புச் செய்யும் வாணர்க்கும், பாணர்க்கும், நற்றவர்க்கும், மற்றவர்க்கும் தன்பொருளைக்கரவாது, அவர்கள் இல்லறம் நடத்துதற்கு வேண்டும் பொருள்களை நாடோறும் வரையாது கொடுத்துவந்தான். அதனை நல்லூர் நத்தத்தனார்,

"கரவாது, நட்டோர் உவப்ப நடைப்பரி காரம்
முட்டாது கொடுத்த முனைவிளங்கு தடக்கைத்
துளிமழை பொழியும் வளிதுஞ்சி நெடுங்கோட்டு
நளிமலை நாடன் நள்ளி....................."

என்று புகழ்ந்து கூறியுள்ளார்.

அவன் இல்லாள், அவன் மனமொத்துத் தன் வாழ்க்கையை நடத்திவந்தாள். நள்ளி, வீட்டில் இல்லாத காலத்தில், எவரேனும் பரிசிலை விரும்பியேனும், வேறு பொருளை அடைய வேணும் நாடிச்செல்வார்களேயாயின், அவன் மனைப்பெண்டிர் எதிர்கொண்டழைத்து முகமன்கூறி, வந்தவர் தரத்திற்குத் தக்கபடி பரிசில் நல்குவர். அவன் மனைவி,

" தற்காத்துத் தற்கொண்டான் பேணித் தகைசான்ற
சொற்காத்துச் சோர்விலாள் பெண்"

எனப்புகன்ற பொய்யாமொழியார் திருவாக்குப்படி, எல்லா நற்குணங்களும் அமையப் பெற்றவளாய், ஐம்புலன்களால் யாதொரு விதமான தீங்கும் தனக்கு நேராவண்ணமும், தனது அஜாக்கிரதையால் உடல் நலம் முதலியன கெடா வண்ணமும், பிறர் பழிக்கும் எவ்விதக் குற்றத்திற்கும் தான் ஆளாகாமலும் தன்னைக் காத்துக்கொள்வாள்; தன்னை மணந்துகொண்ட நாயகனுக்குக் காலந்தோறும், வேளை தவறாமல், அவ்வப்போது அவன் உடம்புக்குத் தகுந்தபடி உண்டி அட்டி, உபசரித்து ஊட்டி, அவனைக்காத்து வருவாள். எப்போதும் அவள், அவனிடத்தில் மலர்ந்தமுகத்தோடு அன்புடன் பேசி அவனைக் களிக்கச்செய்வாள்.

அவள், மற்றவர்களிடத்திலும் இனிய சொற்களைக் கொண்டே பேசுவாள்; ஒருபோதும் கடுகடுத்துப் பேசமாட்டாள். மேன்மையான சொற்களே தனது நாவில் வரும்படி இளமையிலிருந்தே பழகிக்கொண்டாள்; தான் பேசும் சொற்களுள் தகாதமொழிகள் ஏதேனும் வந்துவிடுமோ என்று அஞ்சி, அவசரப்பட்டு ஒன்றும் பேசாமல், நிதானமாகப் பேசிச் சொற்குற்றம் தனக்கு உண்டாகாமல் காத்துக்கொள்வாள். நங்கையர்க்குரிய நற்குணங்கள் யாவும் ஒருங்கே அமையப்பெற்ற அம்மங்கையை மனைவியாகப் பெற்றுள்ள நள்ளிக்கு வேறு என்ன தான் குறைவுண்டு ?

நள்ளியினுடைய நற்குணத்தால், அவனுடைய வீட்டிற்கும், குடும்பத்திற்கும் நள்ளி என்னும் பெயரே குடிப்பெயராய் நிலைத்துவிட்டது. அதனால், அவன் குடும்பத்தைச் சேர்ந்த

எல்லாரையும் நள்ளி வீட்டார் என்றும்; நள்ளிக் குடும்பத்தார் என்றும் கூறுவர்.

நள்ளிக்குத் தம்பி ஒருவன் இருந்தான். மூத்தோனைப் பெருநள்ளி என்றும், இளையோனைச் சிறுநள்ளி என்றும் ஏனையோர் செப்பலாயினர். மற்றும் நம் சரித நாயகனாகிய பெருநள்ளி, நாட்டிற்கும் காட்டிற்கும் தலைவனாய் இருந்தமை யால் எல்லோரும் அவனைக் கோப்பெருநள்ளி என்று கூற லாயினர். தவிரவும், அவனுடைய நளிமலையில் சதுரக்கள்ளிச் செடிகள் மிகுதியாக இருந்தன. சதுரக்கள்ளிக்குக் 'கண்டீரம்' என்னும் பெயரும் உண்டு. அக்காலத்தில் அதனை, அப் பெயராலேயே குறிப்பிடுவது வழக்கம். அதனால், நளிமலைக் குக் 'கண்டீரமலை' என்னும் பெயரும் ஏற்பட்டிருந்தது. நள்ளி, அம்மலைக்குத் தலைவனாய் இருந்தமையால், அவனைக் கண்டீரக் கோப்பெருநள்ளி என்றும், அவன் தம்பியை 'இளங் கண்டீரக்கோ' என்றும் அழைப்பர். இளங்கண்டீரக்கோ தனது தமையன் சொல்லைத் தட்டி ஒருநாளும் நடவான்; தமையன் எப்படியோ அப்படியே தானும் இருப்பான்; குணங்கெட்ட அமணனைப் போன்றான் அல்லன். அவன், தனது அண்ணனிடத்தில், இலக்குமணனைக் காட்டிலும் அன் புடையவனா யிருந்தான்.

விச்சிக்கோ என்பவன் ஓர் சிற்றரசன. ஒருநாள் அவன் தம்பியாகிய 'இளவிச்சிக்கோ' என்பான், இளங்கண் டீரக்கோவிடம் வந்தான். இருவரும் ஓரிடத்தில் அமர்ந்து பேசிக்கொண்டிருந்தார்கள். அவ்வமயம், 'பெருந்தலைச் சாத்தனார்' என்னும் புலவர் அவர்களிடம் வந்தார். வந்த தும் அவர், இளங்கண்டீரக்கோவைத் தன்னுள் எழுந்த பேரன்பினால், அன்பு நிறைந்த நண்பர்கள், ஒருவரை ஒரு

வர்காணும்போது தழுவிக்கொள்ளும் இயல்பேபோல் தழுவி மகிழ்ந்தார். அதனைக்கண்ட இளவிச்சிக்கோ சாத்தனாரைப் பார்த்துத், "தாங்கள் என்னை ஏன் தழுவவில்லை?" என்று கேட்டான். உடனே அச்சாத்தனார் அவனைப் பார்த்து, "இவ்விளங்கண்டீரக்கோவும், இவன் தமயனும், இவன் குடும்பத்தாரும் எம்போலிய புலவரால் புகழ்ந்து பாராட்டுதற்கு ஏற்ற அருங்குணங்கள் பலவும் ஒருங்கே அமையப்பெற்று விளங்கும் சீரிய ஒழுக்கமுடையவர்கள்; நீவிரோ அங்ஙனம் உடையவரல்லீர்" என நள்ளியைப் புகழ்ந்தும் விச்சியை இகழ்ந்தும் ஓர் பாடலைப் பாடினர்.

நள்ளி, இங்ஙனம் புலவர் பெருமக்கள் புகழ்ந்து பாடவும், ஏழை எளியர் வாழ்த்துக் கூறவும், வாழ்ந்துவரும் காலத்தில் ஒருநாள், தனது காட்டைக் காணச் சென்றான்.

நள்ளியினுடைய காடு மிகப் பெரிது. அதன் இருமருங்கும் இரு மலைத்தொடர்கள் அமர்ந்து அழகுடன் விளங்கின. காலந்தோறும் பலன்கள் பல உண்டாக்கும் பலவகையான மரங்களும், செடிகளும், கொடிகளும் மிக்க செழிப்புடன் தம்தம் தரத்திற்குத் தக்கபடி ஓங்கி வளர்ந்திருந்தன. அக்காட்டின் இடையிடையே கொடி வழிகள் சில உண்டு. அவை, அவ்வனத்தின் சுற்றுப் பக்கங்களில் உள்ள ஊர்களில் வாழும் மக்கள், மலைகளுக்குச் செல்வதனாலும், வேற்றாருக்குக் காட்டைக் கடந்து செல்வதனாலும் ஏற்பட்டவைகளாம். அவற்றின் ஓரங்களில் வானுற ஓங்கி வளர்ந்த மரங்கள், குளிர்ந்த நிழலைக் கொடுத்துக் கொண்டிருக்கும்.

அவ்வாறு அமைந்திருந்த மரங்களுள், பலாமரம் ஒன்று. அதன் கீழ், நிழலில் வன்பரணர் என்னும் புலவர் பெருமான்

அமர்ந்திருந்தார். அவர் வேற்றூருக்குச் சென்று, நடந்து வந்ததால் மிகக் களைப்புற்றிருந்தார். அதனால், அவர் கால்களில் செம்மண்புழுதி மலிந்திருந்தது. அவர், அறிவில் முதியரானதுபோல், ஆண்டிலும் முதியராயிருந்தார்.

அவர், நள்ளி வருகையைக் கண்ணுற்று "இவன் இக்காட்டிற் குரிய வேடனோ" என்று எண்ணி எழமுயன்றார். அதற்குள் அவன், அவருக் கருகடைந்து, கைகுவித்து, அவரை அப்படியே உட்காரச் சொன்னான். புலவர், உட்கார்ந்ததும் அவனை ஏற இறங்கப் பார்த்துக் கொண்டிருந்தார். உடனே அவன், தனது மலர்முகங்காட்டி, அவரைப் பார்த்து இன்சொற் கொண்டு "புலவர் பெருமானே! தாங்கள் என்னைக் கண்டு அஞ்சுகிறீர்கள் போலும்! அங்ஙனம் சிறிதும் தாங்கள் அஞ்சுதல் வேண்டாம்" என்று அன்புடன் கூறித், தான் அக்காட்டில் கண்டெடுத்த, கனிவகைகளைக் கொடுத்து, உண்ணச் சொல்லிவிட்டு, விரைந்து சென்றான்; சென்றவன் அருவிநீர் அருகே பாயும் இடத்தைக்கண்டு மீண்டான்; புலவரை அங்கு அழைத்துச் சென்றான். அவரும் தனது களைப்புநீங்க நீரருந்தினர்; மகிழ்ச்சி மிகக் கொண்டனர்; விரைந்து எழுந்து அவனைப்பார்த்து, தனக்கு அவன் செய்யாமற் செய்த நல்லுதவிக்காக நல்லாசிகூறித் தன்னூர் ஏகற்கு விடைகேட்டனர். அவ்வமயம் அவன், தனது உள்ளத்திலிருந்து எழுந்த பேரன்பின் பெருக்கால், தனது கழுத்தில் இருந்த, மிக விலையுயர்ந்த முத்து மாலையையும், கையில் அணிந்திருந்த இரத்தினம் இழைத்த கடகத்தையும் கழற்றி அவர் கையில் களிப்புடன் அளித்து, விடையும் கொடுத்தனன்.

அவர், அவன் கொடைத்திறத்தை எண்ணி இறும்பூதெய்திப் புன்முறுவலோடு "உனது ஊர் யாது? நாடு யாது?

பெயர் என்ன?" எனக் கேட்டார். அவன், அவ்வினுக்கடகுப் பதில் ஒன்றும் கூறுமல், "யான் காட்டு நாட்டினன்." என்று மட்டும் சொல்லிவிட்டுத் திரும்பித் தனது ஊர் நோக்கிச் சென்றான்.

வன்பரணர், அவனுடைய பெருங்குணத்தை எண்ணி எண்ணிப் பெரிதும் வியந்தார்; மனங்கொள்ளா மகிழ்ச்சியடைந்தார்; தம்மனத்திற்குள் பின்வருமாறு நினைக்கலாயினர்:- "ஆ! ஆ!! இவன் குணமே குணம்! இவன் அன்பே அன்பு! வள்ளல் என்றால் இவனன்றோ வள்ளல்? கொடை என்றால் இவன் கொடுப்பதன்றோ கொடை? உலகில் இவன் போலத் தம் பெயரைக் கூறுமல் தானஞ்செய்வார் உண்டோ? எல்லாரும் தங்கள் பெயர் விளம்பரம் ஆகவேண்டும் என்றுஎண்ணித் தானே தானதருமங்களை ஆடம்பரமாகச் செய்கிறார்கள்? எங்கேயோ நூற்றுக்கு ஒருவர் இருவர் "வலக்கை செய்வது இடக்கை அறியாதிருக்கவேண்டும்" என்று கூறிய இயேசுப் பெருமான் போதனையையும் "மனத்துக்கண் மாசு இலனுதல் அனைத்தறன், ஆகுல நீரபிற" என்று புகன்ற திருவள்ளுவர் திருவாக்கையும் நன்குணர்ந்து நடக்கின்றார்கள். அங்ஙனம் நடப்பவர்களே உலகில் அழியாத புகழைப் பெறுவார்கள் என்று அறநூல் அறைகின்றது. அதன்படிஇவனும் இவ்வுலகம்உள்ளவரை அழியாமல்நிலைத்திருக்கும் நீண்ட புகழைப் பெறுவான். இவ்வுத்தமன் இன்னானென்று அறியாமல்இருப்பேனோ? எப்படியாயினும் யான் முயன்று, வழிப்போக்கரிடம் கேட்டேனும் அறிந்துகொள்வேன்; அறிந்தபின் அவனிடம் செல்வேன்; மீண்டும் அவனைக்கண்டு களிப்பேன்; அவனுடன் உரையாடி மகிழ்வேன்" என்று எண்ணிக்கொண்டே எழுந்து, அவன் சென்ற வழிமேல் விழிவைத்து நடந்தார். அவ்

ஹூரவர்களுள் சிலர், அவருக்கு எதிரே வந்து கொண்டிருந்தார்கள். புலவர், அவர்களை நோக்கி "ஐயன்மீர்! இவ்வழியில் சற்றுத் தூரத்தில் ஓர் ஆடவன செல்கின்றானே? அவன் வேடனைப்போல், காணப்படுவான். அவனை நீங்கள் கண்டீர்களோ? எவ்வளவு தூரத்தில் செல்கிறான்? அவன் யார் என்பது உங்கட்குத் தெரியுமோ? தெரிந்தால் விளக்கமாக உரைக்க வேண்டுகிறேன்" என்றார். அதற்கு விடையாக அவர்கள் "வழியில் எத்தனையோ பேர் போகின்றார்கள். நீங்கள் யாரைக் குறித்துக் கேட்கிறீர்கள்? நீங்கள் கேட்கும் ஆளுக்கு ஏதேனும் அடையாளம் உண்டோ?" என்று கேட்டார்கள். "ஆம், உண்டு; உரைப்பேன் கேளுங்கள்." அவன் :—

" மான்கணம் தொலைச்சிய குருதியம் கழற்கால்
வான்கதிர்த் திருமணி விளங்கும் சென்னிச்
செல்வத் தோன்றலோர் வல்வில் வேட்டுவன்"

"மான் கூட்டத்தைத் துரத்தியடித்த, இரத்தம் தோய்ந்த, அழகிய வீரக்கழலைக் காலில் அணிந்திருப்பன்; சிறந்த ஒளி வீசும் அழகிய நீலரத்னம் அவனது தலை முடியில் விளங்கும். ஓர் கையில் வலியவில் இருக்கும்; மற்றோர் கையில் தீக்கடை கழி யிருக்கும். அவன் சிறந்த வீரன்போல் விளங்குவான்; இவையே யான் குறிப்பிடும் அவனுக்குரிய அடையாளங்கள்" என்று உரைத்தார். அவற்றைக் கேட்டதும் அவர்கள் ஆம்; ஆம்; கண்டோம்; கண்டோம். அவரோ வேடர்! அவர் வேடரல்லர். அவர்தாம் எமது மலைநாட்டுத்தலைவர்; அருங் குணவள்ளல்; நட்பிற்கு உறைவிடம்; கருணைக்கடல்; நள்ளியூரில் வாழ்பவர்; பெருநள்ளி என்னும் பெயர் படைத்தவர்; வீரர்க்குள் சிறந்த வீரர்; ஆண் சிங்கம்போன்ற பலமும், கம்

பீரமும் பெற்றிருத்தலால் யாவரும் அவரைக் கண்டீரக்கோ என்றும் புகழ்வர்.'' என மொழிந்தகன்றார்கள்.

புலவர், அவற்றை எல்லாம் கேட்டு அன்பும், வியப்பும் கொண்டவராய் அவ்வழியே சென்று நள்ளியூரை அடைந் தார்; நள்ளியின் மாளிகையை அறிந்துகொண்டார்; அதன் அருகடைந்து, அங்கிருந்த ஓராள் மூலம் தனது வருகையை நள்ளிக்கு அறிவித்தார்.

நள்ளியும், அவரை வனத்தில் கண்டபோது, தான் காட் டிய அன்பினும் பதின்மடங்கு மேலான அன்புடன் எதிர் கொண்டு வரவேற்று அழைத்துக்கொண்டு தன்னில்லத்துட் சென்று, பலவாறு அவரை உபசரித்துப் பேணிவந்தான். அவரும் அவனிடத்தில் மிகுந்த விருப்பமுடன் நாடோறும் அளவளாவித் தங்கியிருந்தனர்.

அக்காலத்தில் பரிசிலரும், வறியருமாகப் பலர் அடிக் கடி நள்ளியிடம் வந்து அவர்கள் வேண்டும் பொருளைப் பெற் றுச் செல்வார்கள்.

ஒருநாள் வன்பரணர் வரையாது கொடுக்கும் நள்ளியைப் பார்த்து, அவன் கொடையைப் பின்வருமாறு—

“ கறங்குமிசை யருவிய பிறங்குமலை நள்ளியின்
அசைவில் நோன்றாள் நசைவளன் ஏத்தி
நாடொறும் நன்கலம் களிற்றொடு கொணர்ந்து
கூடுவிளங்கு வியனகர்ப் பரிசின் முற்றளிப்பப்
பீடின் மன்னர்ப் புகழ்ச்சி வேண்டிச்
செய்யாகூறிக் கிளத்தல்
எய்யா தாகின்றெஞ் சிறுசெந்நாவே.''

என்று புகழ்ந்து பாடினர்.

இதன்பொருள்:— உச்சியிலிருந்து மிக்க ஆரவாரத்தோடு ஒலித்துக்கொண்டிறங்கும் அருவிகளையுடைய அழகிய உயர்ந்த மலையை உடைய நள்ளியே! நீ தளர்வின்றி முயற்சிக்கும் வலியை உடையவன். அதனால் உண்டாகும் செல்வம், யாவரும் விரும்பி மதித்தற்குரியது. உனது காட்டிலும் நாட்டிலும் உண்டாகும் தானியங்களோ யானைமேல் ஏற்றிக் கொண்டு வரும்படி மிகுந்துள்ளன. அவற்றை அவ்வாறே கொணர்ந்து கொட்டிவைத்திருக்கும் உறைகளோ (களஞ்சியம்) உனது நகரத்தில் மிகுந்துள்ளன. இத்தகைய சிறப்பு வாய்ந்த நகரில், நீ இருந்து கொண்டு, சீரிய அணிகலன்களுடன் எல்லாச் செல்வத்தினையும்நாடோறும் பரிசிலர்க்கீகின்றாய். இந்த அரிய செயலைக் கண்ணுறும் எங்கள் நாக்கு, கண்டபடியும் உள்ளபடியும் உரைத்து உரைத்துப் பழகிவிட்டது; பிறர்க்கு ஈத்துண்ணும் பெருமையை அடையாத அரசரைப் பார்த்து அவர்கள் செய்யாதன, கொடாதனவற்றைப் புகழ்ந்து கூறும் பொய்யைப் பயிலாது ஒழித்தது"— என்பதாம்.

மற்றோர் நாள் மாலை, பாணர் பலர் யாழுடன் வந்தனர். வந்தவர் எல்லோருக்கும் அவரவர்கள் விரும்பிய பொருளை வேண்டிய வரையில் கொடுத்து மகிழ்ந்தான் நள்ளி. அப்பாணர்கள் தாம் பரிசில்பெற்ற மகிழ்ச்சியினால் மெய்ம்மறந்து உணர்வுமயங்கி முறை தவறி யாழை இசைத்துப் பாடி ஆடினார்கள். அதனைக் கண்டிருந்த வன்பரணர் நள்ளியை நோக்கி,

"நள்ளி வாழியோ நள்ளி நள்ளென்
மாலை மருதம் பண்ணிக் காலைக்
கைவழி மருங்கின்செவ்வழி பண்ணி
வரவு எமர் மறந்தனர், அது நீ

புரவுக்கடன் பூண்டவண்மை யானே''
என்று புகழ்ந்து வாழ்த்தினர்.

இதன்பொருள்:—நள்ளி வாழ்வாயாக; நள்ளி வாழ்வாயாக. நீ, உன்னைப் பாடிவருகின்ற, எனது பாணர் குலத்தவரை அநவரதமும் நன்கு காப்பதையே கடமையாகக் கொண்டிருக்கின்றனை. அதனால், அவர்கள் துன்பம் அற்று இன்பம் பெற்றவர்களானார்கள்; அவ்வின்ப மிகுதியால்தம் உணர்வு மயங்கி பண்முறை தவறி, இந்த மாலைப்போதில் பாடவேண்டிய நள் என்னும் ஓசையை உடைய மருதப்பண்ணைப் பாடாமல், காலையில் பாடவேண்டிய செவ்வழிப்பண்ணைப் பாடுகின்றார்கள். இங்ஙனம் அவர்கள் மனமகிழ்ச்சியினாலே மயங்கும்படி செய்தது உனது வள்ளல் குணமே அன்றோ?'' என்பது.

தோட்டி என்னும் மலையும் நள்ளியினுடையதே. அது கனி வகைகள் பலவற்றைக் காலந்தோறும் தவறாமல் கொடுக்கும் இயல்புடையது. அதன் சாரலில், மான், மயில் முதலிய பிராணிகள் மிகுதியாக வாழும். குன்றக் குரவர் முதலிய மலைவாழ் மாக்கள் அம்மலையை அடுத்த பல இடங்களில் வாழ்வார்கள். அவர்கள் நள்ளியின் உத்தரவின்றியே தங்களுக்கு வேண்டும்போது அம்மலை வளன்களைத் தம்முடையதென்றே எண்ணி மிக்க மகிழ்ச்சியோடு அநுபவிப்பார்கள். நள்ளி அதனை உணர்ந்தும் உணராதானைப்போல் இருப்பான். ஏனென்றால், அவர்கள், அவனை அடுத்துக் கேட்டாலும், இல்லை என்று சொல்லாமல் அளிக்கும் கொடைக்குணம் உடையவனன்றோ? நள்ளி, தம்மைக் கண்டிக்காமல் கருணை செய்யும் பெருந்தன்மையை அறிந்த அம்மாக்கள் அவனைப் போற்றிக் கொண்டாடுவார்கள். நள்ளி, தன்னிடம் அணுகி

வந்து கேட்க அஞ்சுவார்க்கும், முடியாதார்க்கும் இவ்வாறு உதவி செய்துவந்தான்.

பெருஞ்சித்திரனர் என்பவர் ஒரு பெரும்புலவர். அவர், அன்பில்லாதவர்கள் மிகுந்த செல்வம் உடையவர்களாய் இருந்தாலும் அவர்களை மதியார், அவர் குமணனுடைய கொடைக் குணத்தைப் புகழ்ந்து பாடியுள்ளார்; அப்பாடலில் நள்ளியைப் பற்றி:—

"....................ஆர்வ முற்று
உள்ளிவருநர் உலைவு நனி தீரத்
தள்ளா தீயும் தகைசால் வண்மைக்
கொள்ளா ரோட்டிய நள்ளி........."

என்று புகழ்ந்துள்ளார். இதன் பொருள்:—நள்ளி, தன்னை நினைந்து ஆசைப்பட்டு வருவாருடைய வறுமை மிகவும் நீங்க தவிராது கொடுக்கும் கூறுபாடமைந்த வண்மையை உடையவன்; பகைவரைத் துரத்திக் குடிகளைக்காக்கும் சிறந்த வீரன்-என்பது

இங்ஙனம், நள்ளி இரவலர்க்கொன்று ஈத் துண்பதும், பரிசில்பெறப் பாடிவரும் பாணரைக் காப்பதுமே தன் கடமையாகக் கொண்டும், மற்றும் கற்றறிந்த பெரியோருடன் கூடிக் களிப்பதனுல் உண்டாகும் இன்பத்தினும் உயர்ந்தது இல்லை எனக் கொண்டும் பலநாள் வாழ்ந்து, மண்மிசை இசைநாட்டி, விண்மிசை எய்து நின்ருன்.

# 4. பேகன்

இற்றைக்கு ஏறக்குறைய இரண்டாயிரம் ஆண்டுகட்கு முன்னர், நம்முடைய தண்டமிழ் நாட்டில் "இடைக்கழி நாடு" என்பது ஒன்றுண்டு. அது உப்பங்கழிகட்கு இடையில் இருந்ததால் அப்பெயர் பெற்றது. அதனைப் பொதுனி நாடு என்றும் கூறுவர். அந்த நாட்டின் ஒரு பக்கத்தில் பெருங்கடல் இருக்கின்றது; அதனால் அதற்குப், பெருங்கடல் நாடு என்றும்; மற்றோர் பக்கம் மலைக்குன்றுகள் பல இருக்கின்றன ஆகையால், மலைநாடு என்றும் பெயர்கள் ஏற்பட்டிருந்தன.

அந்த நாட்டின் நானுபக்கமும் நல்லோர் பலர் வாழ்ந்து வந்தார்கள் "நல்லார் ஒருவர் உளரேல் அவர்பொருட்டு எல்லார்க்கும் பெய்யும் மழை" என்னும் ஆன்றோர் அறவுரைப்படி பருவமழை காலந்தோறும் அந்நாட்டில் பெய்து கொண்டே இருக்கும். அதனால், மலைகளில் நீர் ஊற்றுக்கள் பெருகிக்கொண்டிருக்கும். வாய்க்கால்கள் தோறும் நீர் இடையறாமல் ஓடிக்கொண்டிருக்கும். வாவி, குளம், ஏரிமுதலியவைகளில் என்றும் நீர் நிறம்பி இருக்கும். அந்நாட்டில் வாழும் குடிகள், நீரின் உதவியால், நன்செய் புன்செய் முதலிய நிலங்களிலிருந்து நவதானியங்களையும்; தோப்புத் தோட்டம் முதலிய இடங்களிலிருந்து பூ, காய், கனி முதலிய பண்டங்களையும் ஏராளமாக அடைவார்கள். மற்றும் அவர்கள், கடல்படு திரவியம், நாடுபடு செல்வம், காடுபடு பண்டம், நகர்படு பொருள்கள் என்பனவற்றுள் வேண்டிய வரையில் குறைவில்லாமல் நிறையப்பெற்று, இன்பமுற்று, வாழ்ந்து வந்தார்கள்.

இங்ஙனம், பலவளப்பத்தால் பெருமை பொருந்திய அந்த நாட்டில் உள்ள பெரிய ஓர்மலைக்கு அருகே "நல்லூர்" என்னும் பெயர் பெற்ற ஓர் ஊர் உளது. (அம்மலையின் பெயர் பொதுனி என்றும், அதுவே இப்போது பழனி என்று மருவிய தென்றும்; ஆவியர் நல்லூர், ஆவிநன்குடி என்று மாறியதென்றும்; ஆராய்ச்சியாளர் கூறுகின்றார்கள்.) அவ்வூரில் பல மக்கள் வாழ்ந்து வந்தார்கள். அவர்களுள் பசுக்களைக் காக்கும் மக்களே மிகுதியாய் இருந்தார்கள். அவர்களை ஏனையமக்கள் ஆவியர் என்று அழைப்பார்கள். அந்த ஆவியர் குடியில் 'பேகன்' என்னும் பெயரை உடைய ஒருவன் இருந்தான். அவன் (சேக்கிழாரைப் போலவே) தனது நற்குண நற்செயல்களினால் தன் குடிப்பெயரை விளக்கவேண்டும் என்ற எண்ணம் உடையவனாய் இருந்தான். ஆகையால், அவன் பிறந்து சிறிது அறிவு பெற்ற நாள் தொடங்கியே நல்லவர் என்றும், பெரியோர் என்றும், அறிஞர் என்றும், இனியர் என்றும் சொல்லப்படுபவர்களிடமே சேர்ந்து பழகிவந்தான். இங்ஙனம், இளமையில் பெறும் பழக்கவழக்கங்களே "தொட்டிற்பழக்கம் சுடுகாடு மட்டும்" என்பதுபோல் இறக்கும் வரையில் விடாமல் தொடர்ந்து நிற்குமன்றோ? அவன், அவ்வாறு இளமையில்பெற்ற நல்ல பழக்க வழக்கங்களே, அவனைப் பிற்காலத்தில் பெரிய மனிதனாகவும்; இக்காலத்தில் நாம் அவனைப் புகழும்படியும் செய்து விட்டன. அவனது சரித்திரத்தைப் படிக்கின்ற மாணவர் ஒவ்வொருவரும் அவனைப் போல் தம்தம் இளமையிலிருந்தே நல்ல நேசமும், கூரிய அறிவும், இனிய அன்பும், நற்செய்கையும் பெற முயற்சிசெய்ய வேண்டும்.

பேகன், தேனினும் இனிய நம் தமிழ் மொழியை நன்கு கற்றுத் தெளிந்தான். "கற்கக் கசடறக் கற்பவை;

கற்றபின் நிற்க அதற்குத்தக.'' என்னும் தேவர் வாக்குப்படி தான் படித்த நீதி நூல்களில் எவ்விதம் நடக்கவேண்டும் என்று கூறி இருக்கின்றனவோ, அவ்விதமே ஒழுகியும் வந்தான். அதனால், அவன் எல்லோராலும் புகழப்பட்டான். அவன், இனிய பார்வையும் யானைபோன்ற கம்பீரமான தோற்றமு முடையவனாய் இருந்தான். மற்றும், அவன் சிறந்த உடற் பலமும் உடையவனாய் இருந்தான். இக்காரணங்களால் பிறகு, அவன் ஆவியர் குடிகட்குத் தலைவனானான். அன்றியும், அம்மலை நாட்டையும் தன்னுடைய தாக்கிக்கொண்டான். இங்ஙனம், அவன் பெருமையிற் சிறந்து விளங்கினமையால் "பெரும் பேகன்" என்றும்; ஆவியர்க்குத் தலைவன் ஆன தால் "ஆவியர்கோன்" என்றும் அழைக்கப்பட்டான். அவன், தனது நிலங்களில் விளைந்து வரும் வைக்கோலை விலைக்கு விற்பதில்லை. அதனைப் பசுக்கள் கூடும் மந்தைவெளியிற் போர்ப் போராகப் போட்டு விடுவான். அங்குக்கூடும், அவ் வூரவர் பசுக்கள் எல்லாம், அதனை வயிறார உண்டு விட்டுத் தம் தம் வீட்டிற்குச் செல்லும். இங்ஙனம் அவன் பசுக்கள் உடல் வளரச் செய்துவந்த பெருந்தானத்தினால், முடிவில் "வையா வுக்கோ" என்றும் "வையாவிக் கோப்பெரும் பேகன்" என் றும் பெயர்கள் அடைந்தான்.

உயர்ந்த அறிவில்லாத (அஃறிணைப்) பிராணிகளிடத் தில் அளவில்லா இரக்க முடையவனாயிருந்த அவன், உயர் திணைப் பிராணிகளிடத்தில் எவ்வளவு அன்புடையவனாயிருந் தான் என்பதை எடுத்துரைக்கவும் வேண்டுமோ?

இக்காலத்தில் நம்முடைய நாட்டின் அரசாங்க மொழி யாக இருக்கும் ஆங்கிலம் கற்றவர்களையே யாவரும் மதித்துக் கொண்டாடுவதைப் பார்க்கிறோம் அல்லவா? எந்த நாட்டிலும்

அந்தந்த நாட்டு அரசாங்க மொழிக்கே மிகவும் பெருமை உண்டு. அங்ஙனமே, பண்டைக் காலத்தில் நம்முடைய தமிழ் நாட்டை ஆண்டுவந்த அரசர்களுக்கும், நம் தாய் மொழியாகிய தமிழ் மொழியே அரசாங்க மொழியாக இருந்தது. அதனால், அக் காலத்தில் தமிழ்மொழி கற்றவர்களைக் குடிமக்கள் முதல், கோமக்கள் ஈறாக உள்ள எல்லாரும் போற்றிப் புகழ்ந்து வந்தார்கள்.

அம்முறைப்படி பேகனும் தமிழ்ப்புலவர்களை ஆதரித்துப் பேணிவந்தான். புலவர்களும் அவனைப் புகழ்ந்து பாடிச் செல்வார்கள். அவன் புலவர்களுக்கு வேண்டியபொருளை வரையாது கொடுத்ததைப் போலவே,ஏழை எளியவர்கட்கும், கல்வியில் நிறம்பாத பாவாணர்க்கும் அவரவர்கள் வேண்டுகிற படி கொடுத்து அவர்களை மகிழ்விப்பான். அவன், அங்ஙனம் செய்துவரும் கொடையின் மேன்மையைப் புலவர் பலர் பாராட்டிப் பாடியுள்ளார்கள். அவர்களுள் பரணர் என்னும் பெரும்புலவர்,—

"அறுகுளத் துகுத்து மகல்வயற் பொழிந்து
முறுமிடத் துதவா துவர்நில மூட்டியும்
வரையா மரபின் மாரி போலக்
கடாஅ யானைக் கழற்காற் பேகன்
கொடைமடம் படுத லல்லது
படைமடம் படான்பிறர் படைமயக் குறினே.''—

என்று புகழ்ந்து பாடியுள்ளார். இப்பாடலின்பொருள்:—

"மும்மதம் பொழியும் பலம் பொருந்திய யானையை உடையவனும், வீரக்கழலைக் காலில் அணிந்தவனும் ஆகிய பேகன், கற்றார்க்கும், ஏழையர்க்கும், எளியர்க்கும், வாணர்க்

கும், பாணர்க்கும் வரையாது கொடுத்துதவுகின்றான். அவன் கொடைக்குணம், நீர் அற்று வறண்டு கிடக்கும் குளங்களி லும், அகன்று பரந்து கிடக்கும் விளைநிலங்களிலும் பெய்து அவற்றை நிறப்பியும்; அவ்விடங்களில் பெய்யாமல் விளை யாத களர்நிலம் முதலிய இடங்களில் பெய்து அவ்விடங்களை நிறப்பியும், ஒரேகாலத்தில் எல்லாவிடங்களில் பெய்தும் வரு கின்ற, வரையாத வழக்கத்தை உடைய மேகத்தினது குணம் போன்றது. இங்ஙனம் அவன், கொடை செய்யுங்காலத் தில்தான் அவன், அகாரணமாய்ச் செய்யும் அறிபாமையை உடையவன் ஆகின்றான். ஆனால் போர்க்களத்தில், எதிர்ப்ப வர் நிலைமையை நன்குணர்ந்து, அறநெறிகடவாது அமர்புரி யும் அறிவை உடையவனே ஆவான்.—என்பதே.

இங்ஙனம், பரணர் கூறியுள்ள பாடலால் பேகன் சிறந்த போர்வீரனாகவும் விளங்கினான் என்பதும்; போர்முறைக் கல்வி யையும் நீதிநூல்களையும் நன்குணர்ந்தவன் என்பதும்; தன்னை மறக்கும் மெய்யன்பு உடையவன் என்பதும் ஏற்படுகின்றன. அவனது உணர்வற்ற பேரன்புக்கு மற்றுமோர் உதாரணம் உண்டு. அதாவது:—

அவனுடைய மலையின் அருகே ஓர் சோலை இருந்தது. அச்சோலையும் மலையும் காண்போர் களிக்கும் இனிய பல காட் சிகளை உடையவை. அவையும் மாலை வேளைகளில் மனத்திற்கு மிக்க இன்பத்தைக் கொடுக்கும். குளிர்காலத்தில், ஓர்நாள் மாலை வேளையில், தன்னுடைய மலையின் காட்சியைக் காணச் சென்றான் பேகன். அப்போது அவன் விலையுயர்ந்த பட்டுப் பீதாம்பரச் சால்வையைப் போர்த்துக் கொண்டிருந்தான். குளிர்ந்த காற்று வீசிக்கொண்டிருந்தது. வானத்தில் மேகங் கள் ஓடிக்கொண்டிருந்தன. பேகன் அக்காற்றின் சுகத்தை

அநுபவித்துக்கொண்டும், மலையில்தோன்றும் இயற்கையின் விநோதங்களைக் கண்டு களித்துக்கொண்டும் சுற்றி வந்தான். அவ்வமயம் ஓர் மயில், அழகான தன்னுடைய தோகையை விரித்து ஆடிக்கொண்டு பேகனுக்கு முன்னே வந்து கொண்டு இருந்தது. பேகன் அதைக்கண்டு மனத்துள் அடங்கா மகிழ்ச்சியும், வருத்தமும் கொண்டான். மயிலின்மேல் பேரிரக்கம் கொண்டான். அன்பின் மிகுதியால் அவன் தன்னையே மறந்து அம்மயிலைப் பார்த்து, "ஓ அழகிய மயிலே! நான் உனது அழகைக் கண்டு களிக்கும் பொருட்டே கடவுள் உன்னை என்மலையில் படைத்தான்போலும். அழகுடைய நீ குளிரால் மிகவும் நடுக்கமடைகின்றாய். உன்னைவாட்டும் இந்தக்குளிரை நான் ஓட்டுவேன்'' என்று கூறிக்கொண்டே தான் போர்த்துக் கொண்டிருந்த பீதாம்பரத்தைஎடுத்து அம்மயிற்குப்போர்த்து விட்டு, வீட்டிற்குத் திரும்பிவிட்டான்.

இவ்வாறு அவன் மயிலுக்கு ஆடை அளித்ததைப் புலவர்பெருமக்கள் புகழ்ந்துரைத்துள்ளனவற்றைஅடியிற்காண்க.

"உடாஅ போரா ஆகுத லறிந்தும்
படாஅ மஞ்ஞைக் கீத்த வெங்கோ
கடாஅ யானைக் கலிமான் பேகன்
எத்துணை யாயினும் ஈத்தல் நன்றென
மறுமை நோக்கின்றோ அன்றே
பிறர் வறுமை நோக்கின் றவன்கை வண்மையே."

என்று பரணர் புகழ்ந்து பாடியுள்ளார்.

இதன் பொருள்:—மத மிகுந்த யானையினையும், மனம் செருக்கிய குதிரையினையும் உடைய எம் தலைவனாகிய பேகன், தான் என்றும் போர்த்துக் கொண்டிருந்த அழகிய ஆடையை, அழகிய தோகையை விரித்து ஆடிய மயிலுக்கு

அளித்தான்; அளிக்கும்போது அது, மயிலுக்குப் பயன்படுமோ என்று எண்ணினானோ என்றால், இல்லை. அல்லது, எவ்வளவாயினும் கொடுப்பது அழகுடையதாகும்; அது, மறுபிறப்பில் பயனைத்தரும் என்றேனும் எண்ணினானோ; அதுவுமன்று. எப்போதும் அவன் மனம் பிறர் நலத்தையே நாடியுள்ளது என்பது.

" வானம் வாய்த்த வளமலைக் கவாஅன்
கான மஞ்ஞைக்குக் கலிங்க நல்கிய
அருந்திற லணங்கின் ஆவியர் பெருமகன்
பெருங்கல் நாடன் பேகன்.............."

இது, நல்லூர் நத்தத்தனார் பாடியது. இதன் பொருள்:— பெரிய மலை நாட்டை உடையவனும், பெறுதற்கரிய வலிமையுற்ற வடிவினை உடையவனும், ஆவியர் குடியிற் பிறந்த பெருமை பொருந்திய மகனும் ஆகிய பேகன், பருவந் தவறாமல் மழை பெய்வதனால் உண்டான செல்வத்தை உடைய மலைப்பக்கத்திற் காட்டிடத்தே திரியும் மயில், குளிர்ந்து கூவி ஆடியதனால், அருள் சுரந்து தான் போர்த்திருந்த போர்வையை அதற்கு அளித்தான்—என்பது.

இங்ஙனம் காரணஞ் சிறிதும் கருதாமல் கொடுப்பது அறியாமை யன்று; கொடை மடம் எனப்படும். கொடை மடம் இன்ன தென்பதைத் திவாகரம்·

" திடமொழி யம்பற் சேந்தனை யேய்ந்த
கொடைமடம் வரையாது கொடுத்த லாகும் "

என்றும்; சூடாமணி நிகண்டு :—

" கொடைமட மென்று சொல்ப
வரையாது கொடுத்த லாமே "

என்றும் கூறுகின்றன. வரையாது கொடுத்தல் என்பதற்கு உச்சிமேற் புலவர்கொள் நச்சினார்க்கினியர் அவர்கள், "கல்வி மிகுதியில்லாத பரிசிலர்க்குக் கொடாதிருத்தலை மேற்கொள்ளாதே. அவர்கள் அளவிற்குத் தக்கனவற்றைக் கொடுத்தல், தனக்கென ஒன்றும் வரைந்து வையாமற் கொடுத்தல் என்றுமாம்" என்று பொருள் கூறியுள்ளார்கள். அவர்கள் வாக்குக்கு இலக்காகப் பேகன் இலங்கினன்.

பேகன் வாழ்ந்துவந்த அவ்வூரிலேயே கண்ணகி என்னும் பெண் ஒருத்தி இருந்தாள். அவளும் ஆவியர் குடியிற் பிறந்தவளே. அவளைப் பேகன் மணந்துகொண்டான். அவன், அவளிடம் மிகுந்த அன்பு வைத்திருந்தான் என்றுரைக்கவும் வேண்டுமோ? ஏனென்றால், அவன், எல்லா உயிர்களிடத்தும் இயல்பாகவே இரக்க முடையவன் என்று முன்பே அறிந்தோமல்லவா? அத்தகைய நற்குணமுடைய பேகன், தன் வாழ்நாள் முற்றும் உயிர்த்துணையாய் அமைந்த மனைவியினிடம் அன்பு கொள்ளாமலிருப்பனோ? ஆகவே, அவன் அவளிடத்தில் வைத்திருந்த அன்பிற்கு அளவே இல்லை. அவளும், அவனிடத்தில் அன்புடனே இருந்தாள். ஆயினும், சிற்சில விஷயங்களில் அவன் மனத்திற்கு மாறுபடுவாள்; அதனால், சில வேளைகளில் பேகன் வெறுப்புக்கு ஆளாவாள்.

இரண்டுமாடுகள் பூட்டப்பெற்ற வண்டி, பாதையில் இடையூறின்றி நேராகப் போக வேண்டுமானால், அவ்விரண்டு மாடுகளும் ஒருமனப்பட்டு நடக்கவேண்டும் அல்லவா? அவ்வாறே இல்வாழ்க்கையை நடத்தப் புகுந்த நாயகனும் நாயகியும் எவ்விஷயத்திலும் வேற்றுமைப் படாமல் இருந்தால் தான், அக்குடும்பத்தில் சிறிய துன்பமும் உண்டாகாமல் இன்

பம் மேன்மேலும் பெருகும். அங்ஙனமின்றிக் கணவன் கருத்துக்கு மாறுபட்டுப் பெண்கள் நடப்பார்களேயானால் இருவருக்கும் துன்பம் பெருகும்; மனமும் சமாதானமாயிராது; குடும்பமும் சீரும் சிறப்பும் நற்பெயரும் பெறுமல் தீமையை அடையும். குடும்பம் நல்ல பெயரைப் பெறுவதற்கும், சிறந்த குணமுள்ள பிள்ளைகளைப் பெறுவதற்கும் பெண்களே முக்கிய காரணமாக இருக்கின்றார்கள். மற்றும், நற்குண முள்ள பெண்ணை மனைவியாக அடைபவன் ஆண்சிங்கம்போல் ஆற்றலும் கம்பீரமும் உடையவனுவான். இவற்றை நோக்கியே அறநூல்கள்

"மருவிய காதன் மனையாளும் தானும்,
இருவரும் பூண்டீர்ப்பி னல்லால்—ஒருவரால்
இல்வாழ்க்கை என்னும் இயல்புடைய வான்சகடம்
செல்லாது தெற்றிற்று நின்று"—

என்றும்,

தருமமெனும் பண்டமிடும் சகடமா மனை வாழ்க்கை
கருமநுகம் பிணித்து மனைக் காதலியும் தானுமென
இருவராய் முறை செலுத்தின் எத்துணைத் தூரமும் [செல்லும்
ஒருவராய்ப் பூண்டு இழுப்பின் ஓர் இறையும் செல்லா [தால்"

என்றும்;

"புகழ்புரிந்த இல்லிலோர்க் கில்லை இகழ்வார்முன்
ஏறுபோற் பீடு நடை"

என்றும்—வகுத்துக் கூறுகின்றன. தவிரவும், கண்கள் இரண்டும் கூடியே ஒரு பொருளைப் பார்க்குமே ஒழிய, ஒருகண் ஒரு பொருளையும், மற்றோர் கண் வேறோர் பொருளையும்

பார்ப்பதில்லை. அங்ஙனமே, இல்வாழ்க்கையை நடத்தும் புருஷனும் மனைவியும் சேர்ந்தே ஒரு காரியத்தைச் செய்ய வேண்டும். அப்படிச் செய்தால்தான் அக்காரியம் நற்பலனைத் தரும். ஒருவரே செய்தால் சிரமம் மிகுதியாகும்; பலனும் குறைவுபடும்; மனமும் நிம்மதியாகாது. இருவரும் கலந்து செய்யின், அவர்கள் மற்றவரால் நன்கு புகழப் படுவார்கள். இது பற்றியே கலியாணமே வேண்டாம் என்று கடிந்து நின்ற சிவப் பிரகாசர்,

"காதன் மனையாளும் காதலனும் மாறின்றித்
தீதில் ஒருகருமம் செய்பவே—ஓதுகலை
எண்ணிரண்டு ஒன்றுமதி என்முகத்தாய் நோக்கழுன்
கண்ணிரண்டும் ஒன்றையே காண்"

என்றும்; திருவள்ளுவ நாயனார்:—
"அன்பும் அறனும் உடைத்தாயின் இல்வாழ்க்கை
பண்பும் பயனும் அது."

என்றும் கூறியுள்ளார்கள்.

ஆகவே, ஏழை வீட்டிற் பிறந்த பெண்களாயினுஞ் சரி, செல்வர் வீட்டிற் பிறந்த பெண்டிராயினுஞ் சரி அவர்கள், தம் கணவர் வருவாய்க்குத் தகுந்தபடி சிக்கனமாகக் குடும்பத்தை நடத்தவேண்டும்; தம்நாயகர் நடையுடைப்பாவனையைத் தழுவி நடக்கவேண்டும்; சிலநாள் பழக்கத்திலேயே தங்கணவர் குணத்தை அறிந்துகொள்ளவேண்டும்; தம்நாயகருடன் எப்போதும் மலர்ந்த முகத்தோடு புன்முறுவல் பூக்கப் பேசவேண்டும். ஏனென்றால், அவர்கள், வெளியிற்சென்று திரும்பி வீட்டிற்கு வரும்போது தொழில் சம்பந்தமாக ஏதாவது துன்பத்தோடு வரக்கூடும். அப்போது அது, ஒருவாறு நீங்குவதற்

கே மனைவியர் மலர்ந்த முகத்தோடு விளங்கவேண்டும். கணவர், தம்புகழை விரும்பியாவது, தம் குடும்பப் பெயரை நிலை நாட்டவாவது, பிற உயிர்களிடத்தில் என்றும் அன்புடன் இருக்க வேண்டும் என்பதற்காவது செய்யும் தான தருமங்களை மனைவியர் தடுக்கவே கூடாது. அவர்கள், அற நெறிக்கும், பகுத்தறிவுக்கும் மாறுகச் செய்யும் எந்தச் செயலையும் கண்டிப்பாய் மறுக்கவேண்டும். அப்படி மறுக்குங் காலத்தில் இனிய உரையாடி, அன்பு காட்டி, அறநெறியை விளக்கி அடக்கமுடன் பேசல் வேண்டும். அவ்வாறின்றி, அண்டை அயல் வீடுகள் வரையில் கேட்கும்படி ஓவெனக் கூச்சலிட்டுப் பேசவே கூடாது. அப்படிப்பேசினுல் இருவருக்கும் இடையிலுள்ள அன்புஅகலும்; வேற்றுமை வந்து சேரும். இவை தவிர, நாயகருக்கு உணவளிக்கும் சமயங்களில் தாயினும்மிகுந்த அன்பைக் காட்டி அவர் மனம் மிக மகிழும்படி உபசரிக்க வேண்டும். உணவுவகைகளில் எங்தெந்தப் பொருள் மீது அவர்களுக்கு விருப்பம் அதிகம் இருக்குமோ அவற்றையே அதிக இனிதாகச் செய்து அளிக்கவேண்டும். அப்படிச் செய்தால்தான் அவர்கள் உடம்பு நலம் கெடாமல் மேன்மேலும் விருத்தியாகும். நாயகர் உடம்பு நலம் பெற்றிருந்தால்தான் நாயகியர்க்கு எல்லா நன்மையும் உண்டாகும். புருஷர் அடைகின்ற புகழும் மனைவியர்க்கு உண்டன்றோ? 'பெருமாள் இருந்தால் தானே திருநாள் நடக்கும்' என்பதை ஒவ்வொரு மாதரும் மனத்திற் கொள்ளவேண்டும். தவிர, உடுத்தும் ஆடை வகைகள் பட்டாயிருப்பினும் பருத்தியாயிருப்பினும் கணவர் கண்டு களிக்கும் வண்ணம் உடுத்தவேண்டும். எந்தப் பழக்கத்தை அநாகரிகம் என்று தலைவர் தள்ளுவாரோ அதனை அறவே அகற்றவேண்டும். நாகரிக மறியாத சில பெண்கள் நடந்துகொள்ளும் தீய

பழக்க வழக்கங்களை நற்குணப் பெண்டிர் நாடவே கூடாது; அவர்களைப்போல் தாமும் செய்ய வேண்டும் என்று எண்ணவும் கூடாது. எப்போதும் இனிமையாகவே பேச வேண்டும். பெரியோர் விரும்பாத சொற்களை மறந்தே விட வேண்டும். குழந்தைகளுக்கு நல்ல பழக்க வழக்கங்களையே கற்பிக்க வேண்டும். பிள்ளைகளிடம் வேடிக்கையாகக் கூடத் தகாத சொற்களைச் சொல்லவே கூடாது. ஏனென்றால், இளமையின் பழக்கம் சிலையில் எழுத்துப் போலாகும். பெண்கள் எச்செயலைச் செய்வதாயிருந்தாலும், புருஷர் உத்தரவு பெற்றே செய்ய வேண்டும். அவ்வுத்தரவும் அன் போடு அளிக்கும்படி செய்ய வேண்டும். குடியிருக்கும் இடத்தையும், உடம்பையும், உடுத்தும் அணி ஆடைகளை யும், உண்ணும் பண்டங்களையும், பாத்திரம் முதலிய பொருள் களையும் என்றும் மிகச் சுத்தமாக வைத்துக்கொள்ள வேண் டும் 'சுத்தம் சோறு போடும்' என்னும் பெரியோர் அமுத மொழியை மதிக்கவேண்டும். இவ்வித நற்குணமெல்லாம் அமையப் பெற்ற பெண்களுக்குச் செல்வம் இல்லாவிட்டா லும் அவர்கள் வாழும் வீடு, எல்லாச் செல்வங்களும் நிறம்பப் பெற்றதாய் இன்பம் மலிந்து மங்களம் பொங்கும். இங்குக் காட்டிய நல்லொழுக்கமில்லாப் பெண்கள் வாழும் வீடு, செல் வச் செருக்குப் பெற்றிருப்பினும் சிறப்பற்று, இசையற்று, மதிப்பற்றுக் கிடக்கும். இது பற்றியே தெய்வப் புலவரும்,

“ இல்லதூ என் ? இல்லவள் மாண்பானல், உள்ளதென்?
இல்லவள் மாணக் கடை.”

என்று அருளினர்.

இங்ஙனம் கூறும் கற்பிலக்கணத்தைக் கண்ணகி நன்கு உணரவில்லை. அதனல் தன் கருத்துக்கு அவள் மாறுபடுகின்

றுள் என்று பேகன் எண்ணினான்; அவள் மனம் மாறுபடும் போதெல்லாம் இவ்வறநெறிகளை எடுத்துக்காட்டி நல்லுரை பல மொழிந்தான்; சில வேளைகளில் கடிந்தும் பார்த்தான். சுய புத்தி இல்லாத பெண்கள் தங்கணவர் சொல்வதைக் கேட்டேனும் செய்யவேண்டுமல்லவா? அக்குணமும் கண்ணகியினிடம் இல்லை. அதனால், அவள் பண்டுபோல் மூர்க்கங் கொண்டு பிடிவாதமாகவே இருந்தாள். பேகன் அவளை ஒன்றும் செய்யாமல், அவளுக்கு நற்குணம் வரும் வரையில் விலக்கி வைக்க வேண்டும் என்று எண்ணி, அங்ஙனமே செய்தான்.

நாயகனால் நீக்கப்பட்ட கண்ணகி, தன் தாய் வீடும் போகவில்லை; தவமேற்கொள்ளத் தோழியுடன் காட்டிற்குச் சென்றாள்; அங்கே சிலநாள் இருந்தாள்; தனி வாழ்க்கை அவளுக்கு வெறுப்பை உண்டாக்கியது. அதனால், அவள் மனம் மிகவும் வருந்தியது. அவள் உடல் நலம் குன்றியது. ஆகவே, அவள் மீண்டும் பேகனோடு சேர்ந்துவாழ விருப்பங் கொண்டாள். 'எவ்வாறு கணவனிடம் போய்ச் சேருவது, சென்றால் சேர்த்துக்கொள்வாரோ அன்றித் தள்ளியே விடுவாரோ' என்று பலவாறு சிந்திக்கலானாள்.

முற்காலத்தில், அரசர்கள், பிரபுக்கள் முதலிய பெரியோர்களுடைய குடும்பங்களில் பிணக்கு ஏற்பாட்டால் அதனைப் புலவர்களே நீக்குவது வழக்கம். அவ்வழக்கப்படி பேகனிடம் நட்புக்கொண்டுள்ள புலவர்களைக் கொண்டு தன் எண்ணத்தை முடித்துக்கொள்ளத் தீர்மானித்தாள் கண்ணகி. அவள் தன் உள்ளத்தில் அவ்வெண்ணம் உதித்ததும் காட்டைவிட்டுப் புறப்பட்டாள்; நாட்டை அடைந்தாள்; புலவர்கள் கூடும் பட்டி மண்டபத்தை அணுகினாள்; அங்கே, கபிலர், பரணர்,

அரிசிற்கிழார் முதலிய புலவர் பெருமக்களைக் கண்டாள் ; தன் விருப்பத்தை அவர்களிடம் அறிவித்தாள்.

அப்புலவர் பெருமக்கள், கண்ணகி நிலையைக் கண்டு மிகவும் இரங்கினார்கள் ; அவளுக்குத் தேறுதல் உரையும் நன்மதியும் புகன்றார்கள். பின்பு அவளை அங்கேயே விட்டுவிட்டுப் பேகனிடம் போனார்கள்.

பேகனைக் கண்ணகியின் பொருட்டுப்
பரணர் சென்று,

“ மடத்தகை மாமயில் பனிக்குமென் றருளிப்
படாஅ மீத்த கெடாஅ நல்லிசைக்
கடாஅ யானைக் கலிமான் பேக!
பசித்தும் வாரேம் பாரமும் இலமே
களங்கனி யன்ன கருங்கோட்டுச் சீறியாழ்
நயம்புரிந் துறையுநர் நடுங்கப் பண்ணி
அறஞ்செய் தீமோ அருள்வெய் யோயென
இஃதியாம் இரந்த பரிசிலஃ திருளின்
இனமணி நெடுந்தேர் ஏறி
இன்னா துறைவி யரும்படர் களைமே”

என்று, புகழ்ந்தும் வேண்டியும் பாடினர்.

இதன் பொருள்:—அழகிய மெல்லிய சிறந்த மயில், குளிரால் நடுங்கும் என்றெண்ணி,ஒரு காரணமும் கருதாமல் அதற்குப் போர்வையை அருளிச்செய்த, அழியாத புகழினை உடையோனே! மதம் பொருந்திய யானையையும் செருக்குடன் தாவியோடும் குதிரையையும் உடைய பேகனே ! இப்பேது எமக்குப் பசியும் இல்லை. குடும்பப் பாரமும் இல்லை. அவற்றை எண்ணி யாம் இன்று உன்னிடம் வரவில்லை. இசையின்பத்தை

விரும்பி வாழ்பவர்கள் (கண்ணகி முதலியோர்) அவ் வின்பக் கடலில் ஆழ்ந்து தலையசைத்துக் கொண்டாடும்படி, களாப் பழம் போன்ற கரிய கோட்டை உடைய சிறிய யாழை வாசிக்கப் பண்ணுவதாகிய அறத்தைச் செய்வாயாக என்று புகல வந்தேம். அருளை விரும்புவோனே உன்னிடம் யாம் விரும்பும் பரிசில் இதுவே. அதாவது கண்ணகி, உன்னருளைப் பெறுமல் பிரிந்தாள்; எந்நேரமும் உன்னை நினைப்பதாலாகிய துன்பம் மிகுதியால் வாடுகிறுள். அஃறிணை உயிர்கள்படும் துன்பத்தையும் கண்டு சகியாத நீ, கண்ணகி படும் துன்பத்தைக் களையாதிருத்தல் தகுதியாமோ? ஆகவே, இன்றிரவே ஒளி வீசும் மணிகள் கட்டிய தேர் ஏறிச்சென்று அவள் துன்பத்தைத் தீர்ப்பாயாக—என்பதாம்.

அரிசில் கிழார் சென்று,

"அன்ன வாகநின் அருங்கல வெறுக்கை
அவைபெறல் வேண்டேம் அடுபோர்ப் பேக!
சீறியாழ் செவ்வழி பண்ணிநின் வன்புலம்
நன்னுடு பாட என்னை நயந்து
பரிசில் நல்குவை யாயின் குரிசில்! நீ
நல்காமையி னைவரச் சாஅய்
அருந்துயர் உழக்குநின் திருந்திழை அரிவை
கலிமயிற் கலாவங் கால்குவித் தன்ன
ஒலிமென் கூந்தல் கமழ்புகை கொளீஇத்
தண்கமழ் கோதை புனைய
வண்பரி நெடுந்தேர் பூண்கநின் மாவே"

எனப் போற்றியும் வேண்டியும் பாடினர்.

இதன்பொருள்:—"கொல்லும் போரில் வெல்லும் வல்லமையுடைய பேகனே! நீ இரவலர்க்கு அரிய அணிகலன்களைக்

கொடுப்பாய் அல்லவா ? அது போல் இன்று, உன்னால் தரப் படும் ஆபரணமும் செல்வமுமாகிய அவை பெறுதலை யாம் விரும்பிவரவில்லை. சிறிய யாழைச் செவ்வழியாகப் பண்ணி வாசித்து உனதுவலியநிலமாகிய நல்லமலை நாட்டை நான்பாட, அதனை நீ விரும்பிக் கேட்டு எனக்குப் பரிசில் தர எண்ணினை யாயின், யாம் விரும்பியதைத் தரல் வேண்டும். அதுதான் யாதோ என்னின், “தலைவனே! நீ அருட் செய்யாமையால், காண்பார் இரங்கும்படி மெலிந்து அரிய துயரத்தால் வருந்து கிறாள் உனது மனைவி. மயிலினது தழைத்த பீலியை ஒன் றாகக் குவித்தாற் போல் விளங்கும் அவளுடைய மெல்லிய கூந்தலில் குளிர்ச்சியும் மணமும்பொருந்திய மலர் மாலையைச் சூடுவதற்கு நீ, வளப்பமும் வேகமும் பொருந்திய உனது குதிரைகள் உயர்ந்த தேரில் பூட்டப்படுக. அதாவது, நீ தேரின்மீதேறி விரைந்து சென்று, உன் மனைவியைக் கண்டு, அவள் கூந்தலுக்கு மலர்மாலை சூட்டி அழைத்து வரல் வேண்டும்” என்பது.

## பெருங்குன்றூர் கிழார் வேண்டுகோள்

ஆவியருடைய வேந்தே! கல்முழையிலிருந்து விழும் அருவிகளை உடைய பல மலைகளை மிக முயன்று கழித்து வந் தேன் ; சிறிய யாழைச் செவ்வழிப்பண்ணை வாசிக்கும்படி செய்து வாசித்து வந்தேன் ; உன்னையும் உன் மலையையும் புகழ்ந்து பாடினேன். அங்ஙனம் வந்த எனக்கு நீ அளிக்கும் பரிசில் யாதெனில்,கார்காலத்து மழையினது இனியதுளி வீழ் கின்ற ஓசையைத் தமியளாகக் கேட்டுவருந்துகிறாள் கண்ணகி. மைபோலும் கரிய நிறமுடைய அவள் கூந்தல் எண்ணெய் இன்றிமாசுற்றுக் கிடக்கிறது. நீ அம்மாசகற்றி நீல மணி

யினும் அது விளங்கப்பண்ணி அழகிய மலர் சூட்ட என்னோடு இன்று வருவாயாயின், அதுவே யாம் விரும்பும் பரிசிலாகும்." என்று பொருள்படும் இனிய பாடலைப் பாடினர்.

## கபிலர் வேண்டிக்கொண்டது

"சினத்திற் செய்யும் போரையும், கைவண்மையாற் கொடுக்கும் கொடையினையுமுடைய விரைந்துசெல்லும் குதிரையை உடைய பேகனே! உன்னுடைய மலைச்சாரலில் குறவர் மாக்கள் பலர் வாழ்கின்றார்கள். மழை வேண்டும் காலத்தில் அவர்கள் கடவுளைப் பேணி மிகுந்த பலியைத் தூவிப் போற்றுவார்கள். கடவுள் அவர்கட்கிரங்கி உன் மலையை மேகம் வந்து சூழும்படி செய்வார். அம்முகில் மிகுந்த மழையைப் பெய்யும். அதனால், மலை மிக வளப்பமுறும். தேனும் தினைமாவும் பெருகும். அம்மக்கள் அவற்றை உண்டு களிப்பார்கள். அங்ஙனம் அவர்கள் இன்பமுடன் வாழ்வதற்கு இடமாயுள்ள மலைநாட்டிற்குத் தலைவனே! அம்மக்கள் தம் துயரைநீக்கக் கடவுளை வேண்டியவாறே, அவர்களினும் சிறந்த உன்னில்லாள் உன்னருளை விரும்பி வாடுகின்றாள். நேற்று யாமும், எமது சுற்றமும் நின்னையும் நினது மலையையும் பாடினோம். அப்போது துன்ப மிகுதியால் சொரியப்பட்டகண்ணீரை நீக்க மாட்டாளாய் நின்றாள். அக்கண்ணீர் மார்பிடம் முற்றும் நனைத்தது. முகில் கருத்து ஒலிப்பதுபோல் அவள் மிகவும் அழுதாள்" என்று பொருள்தரும் இனிய பாடலைப்பாடி வேண்டினர்.

இவ்வாறு, புலவர் பெருமக்கள வேண்டி யுரைத்த இன்னுரைகளைக் கேட்டுச் சிறிது மனமாறினான் பேகன்; ஆயினும் துணிவாக ஒரு முடிவும் கொள்ளாதிருந்தான். அக்குறிப்பைக்கண்ட பரணர் பெருமான் மீண்டும் அவன் முன்பு வந்து

அவனைப் பார்த்து, " வள்ளலே! நீ அருள் பண்ணவிட்டால் மிகவும் கொடியதாகும். நீல நறு நெய்தல்போல் பொலிந்த மையுண்ட அவளுடைய கண்கள் கலங்கியுள்ளன; அருவி போல் நீரைச் சொரிகின்றன. அந்நீர் மார்பை நனைப்ப காந்தள் மொட்டுப்போன்ற தன் விரலால் கண்களைத் துடைத்து மிக வருந்துகிறாள். அவளுடன் சில தோழியரும் இருக்கின்றார்கள். அவர்கள் தேற்றவும் தணியாதிருக்கின்றாள்' நாங்கள் அவளைப் பார்த்து "எமது கேண்மையை விரும்பும் பேகனுக்கு நீ கேளாகுவையோ" என்றேம். அப்போது, அத் தோழியர் " நாங்கள் கண்ணகிக்கும் பேகனுக்கும் உறவினரல்லேம். பேகன் எம்போன்ற பெண்ணொருத்தியை விரும்பிப் பழியிற்பட்டான். அதனால், இவளை நீக்கினன். இவளும் அவன் குற்றத்தை நீக்க இங்ஙனம் சத்தியாக்கிரகம் பண்ணுகிறாள். இனியும் அவன் அருளாவிட்டால் இவள் இறப்பது திண்ணம். அவ்விறப்புப் பழியும் அவனையே சேரும்" என்றனர். நீ பழியற்றவனாய் விளங்கவேண்டும் என்பதே எங்கள் ஆவல். ஆகையால், அவளை ஏற்றுக் கொண்டு பண்டுபோல் இல்லறம் நடத்துவாயாக என்று கூறினர்.

அதன்மேல் பேகன் மனந்தெளிந்து சினமடக்கிச் சென்று கண்ணகியை அழைத்து வந்து, பன்னாள் வாழ்ந்து பூவுலகில் புகழுடம்பை நிலைநாட்டித் துறக்கம் புகுந்து நின்றனன்.

# 5. ஓரி

நீராரும் கடலுடுத்த நிலமடந்தைக்கு எழிலொழுகும்
சீராரும் வதனமெனத் திகழ்பரத கண்டமிதில்
தக்கசிறு பிறைநுதலும் தரித்தநறுந் திலகமுமே
தெக்கணமும் அதிற்சிறந்த திராவிடநற் றிருநாடும்
அத்திலக வாசனைபோல் அனைத்துலகும் இன்பமுற
எத்திசையும் புகழ்மணக்க இருந்தபெருந் தமிழ்அணங்கு

வாழும், புகழும் பொருளும் பொருந்திய நம்முடைய திருநாட்டில் மலைத்தொடர்கள் பலவுண்டு. அவற்றுள் "கொல்லிமலை" த்தொடர் என்பது ஒன்று. அது, இப்போது சேலம் ஜில்லாவில் நாமக்கல், இராசிபுரம் தாலுக்காக்களின் இடையே தொடர்ந்து, சேரநாட்டிற்குள் செல்கின்றது. சேரநாட்டிற்கு, இப்போது கேரளம் என்றும், மலையாளம் என்றும் பெயர்கள் வழங்குகின்றன.

கொல்லிமலையின் சிகரம் நாலாயிரம் அடிகட்கு மேல் உயர்ந்து இருக்கும். அம்மேலிடம் அழகிய பீடபூமி போன்றுளது ; தவஞ்செய்ய விரும்பும் துறவிகட்குத் தகுந்தது ; தனித்துறைய விழையும் செல்வர்க்குச் சிறந்தது ; காய், கனி, தேன் முதலான உணவுப் பொருள்களை மிகுதியாக உடையது. ஆதலால், ஆங்குப் பலர் சென்று வதிவர்.

அப்படித் தவஞ்செய்து வாழும் முனிவர் முதலியோரை அரக்கர் அவுணர் முதலான கொடியர் வந்து துன்புறுத்துவர். அத்தீயரைக் கொல்லுதற்குப் பலநாள் ஆராய்ந்தனர் முனிவர்; முடிவில் ஓர் பொறி செய்தனர். அவ்வியந்திரம், ஒப்பற்ற அழகுடைய பெண்போன்றே விளங்கிற்று. அதன் அங்கங்கள் இயங்கும் தன்மை பெற்றன. அரக்கர் ஆதிய அயலார்

தம் வாடை பட்டவுடன் அது நகைக்கும் திறனுடையது; காண்பாரது உள்ளத்தையும் கண்ணையும் கவர்ந்து, இறுதியில் கொல்லும் குணமுடையது. ஆதலான், அதற்குக் கொல்லிப் பாவை என்னும் பெயர் ஏற்பட்டது.

இவ்வாறே, இயங்கும் பலவகை இயந்திரங்களை இரண்டாயிரம் ஆண்டுகட்கு முன்பு இருந்த தமிழ் மக்களாகிய நம்முன்னோர் உண்டாக்கி, அவற்றால் பல பயன் பெற்றார்கள் என்பதைப் பெருங்கதை, சிந்தாமணி, சிலப்பதிகாரம், முதலிய பண்டைத்தமிழ் நூல்களை நன்கு, நடுநிலையுடன் ஆராய்ந்து பார்ப்பின் அறியலாம். அவற்றை ஒரு சிறிதும் ஓதாமல், மேனாட்டு இரசாயனங்களையும், இயந்திரங்களையும் வியந்து காண்பார் பண்டைத் தமிழரை எங்ஙனம் போற்றுவர்? அதனைத் "தமிழரது பொறியறிவு" என்னும் எனது கட்டுரை நூற்கண் விரிவாய்க் காண்க. இது நிற்க.

அப்பாவை நகைத்துக் கொல்லும் என்பதைச் சித்திரமடல்,

"திரிபுரத்தைச் செற்றவனும் கொல்லிச் செழும்
[பாவையும்
நகைக்கக் கற்றதெல்லாம், இந்த நகை கண்டேயோ"

என்று கூறி விளக்குகிறது.

மற்றும் அப்பாவை காற்று, இடி, மழை முதலியவற்றால் சிறிதும் அழிவுறாது. அதனை,—

"செவ்வேர்ப் பலவின் பயங்கெழு கொல்லித்,
தெய்வங் காக்கும் தீதுதீர் நெடுங்கோட்
டவ் வெள்ளருவிக் குடவரை யகத்துக்
கால்பொருது இடிப்பினும், கதழுறை கடுகினும்

உருமுடன் மெறுயினும் ஊறுபல தோன்றினும்
பெருநிலங் கிளரினும் திருநல உருவின்
மாயாது இயற்கைப் பாவை"

என்று நற்றிணை கூறு மாற்றானுணரலாம்.

பண்டைத் தமிழ்நூற் பேராசிரியர்கள் நறு நலனுற்ற நங்கையர்க்கு உவமையாக இப்பாவையையே எடுத்துச் சிறப்பித்துள்ளார்கள். அவற்றுள் சில காட்டுதும்.

(1) சிந்தாமணி-நாம-இல-168-பாடல்

"கப்புரப் பசுந்திரை கதிர்செய் மாமணிச்
செப்பொடு சிலதியர் ஏந்தத் தீவிய
துப்புமிழ்க் தலமரும் காமர் வல்லியும்
ஒப்பரும் பாவைபோன் றுறையு மென்பவே"

இப்பாவுக்கு நச்சினார்க்கினியர் செய்த உரை:—

"கருப்பூர முதலியவற்றை உடைய சுருளைச் சேடியர் செப்போடேந்த, அதனை நுகர்ந்து ஐம்பொறிக்கு மினிய நுகர்ச்சிகளைக் கணவனுக்குக் கொடுத்து இன்பமெய்த அலமரும் விசயையும் அவனுக்குக் கொல்லிப்பாவைபோற் றங்குமென்க.

வேறு கருத்துச் சொல்லாமற் றன்னையே கருது வித்தலின் பாவை என்றார்" என்பது.

(2) சிந்தாமணி காந்தருவ-இல-175-பாடல்

"ஐயனுக்கமைந்த நீராறுபத்து நால்வ ரம்பொன்
வையகத் தமிர்தமன்னார் வாக்கமை பாவையொப்பா
ரெய்திய இளமைமிக்கார் இயைந்தனர்...............
..........................................................."

நச்சினார்க்கினியர் உரை:—

“ இன்பத்தால் அமுதன்னாராய் நீங்கலாகாமையின் கொல்லியம்பாவை அன்னாராய் மூப்பிலாதாராய் அமைந்த நீரார், அறுபத்து நால்வர் ஐயனுக்கு முன்பே இயைந்தார்”.

(3) மாற்பித்தியார் பாடல் (பு-251)

“ ஓவத்தன்ன விடனுடை வரைப்பின்
பாவை யன்ன குறுந்தொடி மகளிர் ”

இதன் பழைய உரை :—

“ ஓவியம் போலும் அழகினை உடைத்தாகிய இடமுடைய இல்லின்கண், கொல்லிப்பாவை போன்ற வடிவினையுடைய சிறிய வளையணிந்த மகளிர் ” என்பது.

(4) உலோச்சனார் பாடல் (நற்றிணை 192)

“ பயங்கெழு பலவின் கொல்லிக் குடவரைப்
பூதம் புணர்த்த புதிதியல் பாவை
விரிகதிர் இள வெயில் தோன்றி அன்ன ”

அ-நாராயணசாமி ஐயர் அவர்கள் உரை :—

“ பயன்மிக்க பலாமரங்களை உடைய கொல்லிமலையினுள் மேல் பாலாக முன்பு தெய்வத்தாலே செய்து வைக்கப் பட்ட புதுவதான நடை கொண்டியங்குகின்ற பாவை விரிந்த ஞாயிற்றின் இளவெயிலிலே தோன்றி நின்றாலொத்த...நினது நலன் ;’ என்பது.

(5) நாலாயிரம்-பெரிய திருமொழி

“குவளையம் கண்ணி கொல்லியம்பாவை
சொல்லு நின்தாள் நயந்திருந்த
இவளை..........................”

இதன்பொருள்:—“கருங்குவளை மலர்போன்ற கண்களை உடையவளும், கொல்லிமலையிலுள்ள அழகிய பதுமை போன்றவளும் ஆகிய இவளை” என்பது.

மற்றும் குறுந்தொகை, அகநானூறு முதலிய நூற்களுள் பரக்கக்காணலாம்.

சிலப்பதிகாரத்துள் இப்பாவையைத் திருமகள் மோகினி அவதாரம் என்று ஆசிரியர் இளங்கோவடிகள் கூறுகின்றார். அவ்வடிகள்—கடலாடு காதை 60—61:—

"செருவெங் கோலம் அவுணர் நீங்கத்
திருவின் செய்யோள் ஆடிய பாவையும்"

அடியார்க்கு நல்லார் உரை:—

அவுணர் வெவ்விய போர் செய்தற்குச்சமைந்த போர்க் கோலத்தோடு விரும்பி வீழும்படி கொல்லிப்பாவை வடிவாய்ச் செய்யோளாகிய திருமகளால் ஆடப்பட்ட பாவை என்னும் ஆடலும்—என்பது.

இவ்வாறு சிறப்பமைந்த அக் கொல்லிப்பாவை, மலைமீது வாழ்பவர்க்குப் பாதுகாவலாக, அதன்மேல் வைக்கப்பட்டது. அது தங்கிய காரணத்தால் அம்மலைக்கும் தானியாகு பெயராய்க் கொல்லிமலை என்னும் பெயர் நிலைத்து விட்டது.

அக்கொல்லியையும், அதனை யடுத்த சிறிய நாட்டையும், இரண்டாயிரம் ஆண்டுகட்கு முன்னர் ஆதன் என்னும் சிற்றரசன் ஆண்டுவந்தான். அது அவனுக்கு இடுகுறிப்பெயராகும்.

அவன் மிகுந்த உடற்பலம் உடையவன். அவன், தான் சீரிய வீரனாகவேண்டும் என்று இளமையிலேயே எண்ணினான்; செந்தமிழ் அறிவை நிறம்பப்பெறக் கருதினான்; நல்லார் இணக்கமே நலனைத்தரும் என்றும் உணர்ந்தான். அவன், தான் எண்ணிய எண்ணங்களை நிறைவேற்றுதற்கு வேண்டிய உலையா ஊக்க முடையனாய் இருந்தான். ஆகையால், அவன் எல்லாப்பயிற்சிகளிலும் விரைவில் தேர்ந்து விட்டான். சிறப்

பாக வில்வித்தையில் அவனை ஒப்பார் ஒருவருமிலர். எவ்வளவு பெரிய வலிய வில்லையும் எடுத்து, வளைத்து, நாணேற்றி அம்பெய்யும் வன்மையும் திறனும் அவன் பெற்றிருந்தான்.

2. குதிரை ஏற்றத்திலும் சிறந்த தேர்ச்சி பெற்றான். அவன் பெரும்பாலும் மலையிடங்களில் குதிரை இவர்ந்தே செல்வான். அவனுடைய குதிரையும் அவனைப்போல் பலமுடையதே. அதற்குப் பிடரிமயிர் மிகவும் அழகாயும் நீலநிற முடையதாயும் இருக்கும். அம்மயிரை அந்த நாளில் ஓரி என்று சொல்வது வழக்கம். அப்பரிமா நீல ஓரியை உடைய காரணத்தால் அதற்கு ஓரி என்று பெயராயிற்று. ஆதன், ஓரிக்குத் தலைவனதால், அவனுக்கும் ஓரிஎன்னும் பெயரே வழங்கலாயிற்று. புலவர்கள் அவனை 'ஓரி' என்றும்; அவன் விற்றிறம் நோக்கி 'வல்வில் ஓரி' என்றும், 'ஆதன் ஓரி' என்றும் கூறலானார்கள். அவற்றை—

"அடுபோர் ஆனா ஆதன் ஓரி"

என்று புறநானூறும்,

அத்தக் குமிழின் கொடுமூக்கு விளைகனி
எறிமட மாற்கு வல்சி யாகும்
வல்வில்லோரி கானம்......'

என்று நற்றிணை நானூறும்,

"......... ... ... ...ஓரி பல்பழப்
பலவின் பயங்கெழு கொல்லி"

என்று அகநானூறும்,

" கடுங்கண் வேழத்துக் கோடுகொடுத் துண்ணும்
வல்வில் லோரிக் கொல்லிக் குடவரை"

என்று குறுந்தொகையும் கூறுமாற்றான் அறியலாம்.

ஓரி சிற்றரசனே ஆயினும், வேறோர் வேந்தனுக்கு அடங்கியவனல்லன். அவன், தனது நாட்டைத் தானே ஆளும் சுயஆட்சி உரிமையுடைய மன்னன். உசாவுவார் ஒருவரும் தனக்குமேல் இலர் என்று குடிகளை ஒரு சிறிதும் வருத்தான்; குடிகள் தாழ்ந்தவர் என்றும், உயர்ந்தவர் என்றும் கருதான்; எல்லாரிடத்தும் சால அன்புடன் விளங்குவான். ஆதலான், எல்லோரும் அவனை அன்பின் வடிவம் என்றே கூறுவர்.

அந்நாளில் சாதிவேற்றுமைகள், இந்நாளில் இருப்பன போல் பரவி இல்லை. மக்கள், தாம் தாம் செய்யும் தொழில்கள் பேரால் வெவ்வேறாக அழைக்கப் பட்டிருந்தார்கள். அவ்விதம், வெவ்வேறாகப் பிரிந்து இருப்பினும் உண்ணல் உடுத்தலினும், கொள்ளல் கொடுத்தலினும் மாறுபாடு கொண்டில்லை. எல்லாரும் ஓரன்னை வயிற்றிற் பிறந்த மக்களைப் போன்றே வாழ்ந்து வந்தார்கள். அங்ஙனம், அவர்கள் அன்புடன் கலந்து வாழும்படி அரசன் நாடோறும் நாடி முறை செய்து வந்தான். அரசன் தானே ஆள்பவனாயிருப்பினும், குடிகளுள் நல்லறிவு நல்லொழுக்கமுடையோரைக் கலந்தே அரசியலுக்குரிய விதிகளை வகுப்பான். அதனால், ஓரி நாடு, அதன் நிலப்பாங்குக்கு ஏற்ற எல்லாத் துறைகளிலும் சீர்பெற்று இலங்கிற்று.

கொல்லிக்கு நாலா பக்கங்களிலும் அருவிகளும், சுனைகளும் பல உண்டு. அவற்றினின்று இழிந்து வரும் நீர் இயல்பாகவே சென்று நிலங்களில் பாயும். அந்நாட்டு மக்கட்கு வேண்டிய பொருள்களுள் பெரும்பாலன அந்நிலங்களில் பயிராகும். காடுகளிலும் பல பண்டங்கள் உண்டாகும்.

அவற்றைக்கொண்டு குடிகள் செல்வர்களானார்கள். அரசனும் மிகுந்த செல்வனாய் இருந்தனன்.

ஓரிக்குச் செல்வப்பொருள் புறத்தே பெருகி வளர்ந்தமை போன்றே, அன்பும் அறிவும் அகத்தே நிலைத்து வளர்ந்தன. சிலர், தமக்குச் செல்வப்பொருள் சேர்ந்தவுடனே, அகங்காரம் கொண்டு அறிவை இழந்து,—

"சிறியரே மதிக்குமிந்தச் செல்வம்வந் துற்ற ஞான்றே
வறியபுன் செருக்கு மூடி வாயுளார் மூக ராவர்
பறியணி செவியுளாரும் பயிறரு செவிட ராவர்
குறிபெறு கண்ணுளாரும் குருடராய் முடிவரன்றே"

என்று கூறும் ஆன்றோர் வாக்குக்கு இலக்காவர் அன்றோ? அங்ஙனம், நமது ஓரி ஆகவில்லை. அவன்,—

"நெல்லு முயிரன்றே நீரு முயிரன்றே
மன்னன் உயிர்த்தே மலர்தலை உலகம்
அதனால், யானுயிர் என்ப தறிகை
வேன்மிகு தானை வேந்தர்க்குக் கடனே"

என்று புறப்பாட்டும் (186)

"நெல்லுயிர் மாந்தர்க்கெல்லாம் நீருயிர் இரண்டும் செப்பின்
புல்லுயிர் புகைந்து பொங்கும் முழங்கழல்இலங்கு வாட்கை
மல்லலங் களிற்று மாலை வெண்குடை மன்னர் கண்டாய்
நல்லுயிர் ஞாலந் தன்னுள் நாமவேல் நம்பி என்றான்"

என்று சிந்தாமணியும் (மு-இ-310)

கூறும் அரச நீதியை நனகு உணர்ந்தவன். ஆதலான், அவன் தான் செல்வம் ஈட்டிவாழ்தல் பிறர் பொருட்டென்றே எண்ணியிருந்தான்.

எண்ணிய வாங்கே, அவன் தன்னிடம் வரும் வறியர்க்கும், மெலியர்க்கும் தன் பொருளை வேண்டுமளவும் வரையாது கொடுத்துவந்தான்; கற்றறிந்த பெரியோரைக் காணின், கணமேயும் அவர்களை விட்டுப்பிரியான்; அவர்கள் வேண்டுமவற்றைக் குறையாதளிப்பான்; கூத்தர் முதலியோர்க்கும் பெரும் பொருள் அளிப்பான்; யானை முதலியவைகளையும் இன்புற ஈவான். அங்ஙனம் பரிசில் பெற்ற பாணர்கள் களிப்பு மிகுதியினாலேயே யாழ் வாசிப்பதையும், பாடும் பாடல்களையும் மறந்து விடுவார்கள். அதனை வன்பரணர்,—

"மழையணி குன்றத்துக் கிழவ னாளு
மிழையணி யானை இரப்போர்க் கீயும்
சுடர்விடு பசும்பூட் சூர்ப்பமை முன்கை
அடுபோ ரானா ஆதன் ஓரி
மாரி வண்கொடை காணிய நன்றும்
சென்றது மன்னெங் கண்ணுளங் கடும்பே
பனிநீர்ப் பூவா மணிமிடை குவளை
வானார்த் தொடுத்த கண்ணியும் கலனும்
யானை இனத்தொடு பெற்றனர் நீங்கிப்
பசியார் ஆகல் மாறுகொல் விசிபிணிக்
கூடுகொள் இன்னியம் கறங்க ஆடலு
மொல்லார் தம்பாடலும் மறந்தே"

என்று புகழ்ந்து பாடியுள்ளார். (பு-153)

இதன்பொருள்:—"ஆதன் ஓரி, கொல்லும் போர்த் தொழிலில் குறையாத ஊக்கம் உடையவன்; மேகம் படியும் உயர்ந்த கொல்லி மலைக்குத் தலைவன்; பசும்பொன்னாற் செய்த ஒளிவீசும் அணியையும், கடக மமைந்த முன் கையினையும் உடையவன்; நாடோறும் முகபடாம் முதலிய அணிகளைப்

பூண்ட யானையை இரப்போர்க்கு ஈபவன். அங்ஙனம் அவன் மாரிபோல் அளிக்கும் வள்ளிய கொடையைக் காண்டற்குக் கூத்தாடுபவராகிய எங்கள் சுற்றக்குழாம் விரும்பிச் சென்றது. ஓரி அவர்கட்கு, குளிர்ந்த நீரில் பூவாத மணிகள் இழைத்த, வெள்ளி நாரால் தொடுத்த, பொற்குவளை மாலையினையும், பிற அணிகலன்களையும் யானைகளுடனே கொடுத்தான். அவைகளைப் பெற்ற அவர்கட்கு அளவு கடந்த மகிழ்ச்சி பொங்கிற்று. அவர்கட்கிருந்த பசியும் பறந்தது. ஆதலான், அவர்கள் வாரால் வலித்துக் கட்டப்பட்ட பல கருவியும் தொகுதி கொண்ட இனிய இயங்கள் ஒலிப்பதற்கு ஏற்ப ஆடுதலையும் பாடுதலையும் மறந்தனராய்ச் சென்றார்கள்" என்பதாகும்.

இதனால், பலநாள் பயின்று கற்ற கல்வியைக் கூடப் புதிதாகப் பெற்ற செல்வம் மறப்பிக்கும் என்பது விளங்குவதைக் காண்க

கழைதின் யானையார் என்னும் புலவர் ஒருவர் இருந்தார். அவர் மிகத் தைரியமும், கம்பீரமுமுடையவர். ஒரு நாள், அவர், ஓரியினிடம் சென்றார்; அவனைக் கண்டார். அவன் புலவரைக் கண்டதும் வந்தனம் கூறி வரவேற்று ஆதனம் தந்தான். புலவர் அவனை நோக்கி, "வானத்தில் விளங்கும் மின்னலை உடைய மேகம்போல யாவர்க்கும் எப்பொருளையும் வரையாமல் வழங்கும் வண்மையையுடைய பேகனே! இரவலர் ஒருவனிடம் சென்று இன்னபொருளைக் கொடு என்று இரந்து கேட்டல் இழிந்தது. அங்ஙனம் கேட்டோர்க்கு முன்னே நின்று ஈயேன் என்று சொல்லி மறுத்தல் இரத்தலினும் இழிந்தது. ஒருவன் ஒரு பொருளைக் கேட்பதற்கு முன்னமே, அவன் முகக்குறிப்பை அறிந்து, இப்பொருளைப் பெற்றுக்கொள்வாயாக என்றுரைத்து விரும்பிக்கொடுத்தல்

உயர்ந்தது ; அதனை, அவன் எதிரே நின்று வேண்டாம் என்று சொல்லி மறுத்தல் அக்கொடையினும் உயர்ந்தது. தண்ணீர் அருந்த விரும்பினோர், ஒலிக்கும் அலையை உடைய தெளிந்த நீர்ப்பரப்பாகிய பெரிய கடல் நீரை உண்ணார். உண்ணும் நீரையுடைய இடம் சேற்றோடு கூடிச் சிறியதாயிருந்தாலும் அவ்விடத்திற்கு மாடு முதலிய விலங்குகள் விரும்பிச்செல்லும் வழி பலவாகும். அதுபோல ஒருவன் மிகுந்த செல்வம் உடையவனாயினும் அவனிடம் அன்பு இல்லாவிட்டால் யான் அவனிடம் போகேன். வள்ளியோன் குறைந்த செல்வமுடையவனாயினும் அவனிடம் விரும்பிச் செல்வேன். அங்ஙனம் சென்றபோது பரிசில் கிடைக்காதொழியின் அவ்வள்ளியோனை வாழ்த்துவேனே யன்றிப் பழியேன். யாம் புறப்பட்டபோது கண்ட பறவைச் சகுனத்தையும் காலத்தின் தன்மையையும் பழித்து மீள்வேம். எனவே, நீ எனக்குப் பரிசில் அளிப்பினும், அளியாதிருப்பினும் வாழ்வாயாக. ஈயேன் என்னும் இழிவையும் கொள்ளெனக் கொடுக்கும் உயர்வையும் நீ உணர்ந்து தக்கதைச் செய்வாயாக'' என்று பொருள்படும் பாடலைப் பாடினார்.

அப்பாடலை அடியிற் காண்க :—

ஈயென விரத்த லிழிந்தன் றதனெதி
ரீயே னென்ற லதனினு மிழிந்தன்று
கொள்ளெனக் கொடுத்த லுயர்ந்தன் றதனெதிர்
கொள்ளேனென்ற லதனினு முயர்ந்தன்று
தெண்ணீர்ப் பரப்பி னிமிழ்திரைப் பெருங்கட
லுண்ணா ராகுப நீர்வேட் டோரே
யாவு மாவுஞ் சென்றுணக் கலங்கிச்
சேற்றொடு பட்ட சிறுமைத் தாயினு
முண்ணீர் மருங்கி னதர்பல வாகும்

ஓரியும் அப்பாடலைக் கேட்டுப் புலவர்க்கு வேண்டும் பரிசில் தந்து மகிழ்ந்தான்.

ஓரி ஓர் மலைமீது இருப்பினும், அவனுடைய புகழ் மூவர் நாட்டையும் மூடியது. அதனை நாட்டின் ஆங்காங்கிருந்த பாவாணரும் மிடிவாணரும் கேள்வியுற்றனர்; ஓரியைக்காண விழைந்தனர். மலைமீதேறும் வலியற்றவரும் காந்தத்தை நாடி ஓடும் இரும்பைப்போல் நசையுடன் விசைந்து சென்றனர். அவ்விதம் போந்து ஆடினவர்க்கும், பாடினவர்க்கும் அவன் தனது நாட்டையே பகிர்ந்து ஈந்து வந்தான். அதனைச் சிறு பாணாற்றுப்படை:—

" களிசினை நறும்போது கஞலிய
நாகுமுதிர் நாகத்துக் குறும்பொறை
நன்னாடு கோடியர்க் கீந்த ஓரி '

என்று உரைப்பதால் உணரலாம்.

இங்ஙனம், அவன் தனது நாட்டை இரவலர்க்குப் பரிசிலாக்கிய செய்தி நாடெங்கும் பரவிற்று. அவனும் பெரும் புகழ் பெற்றான்.

ஓரி மிகச் சிறிய நாட்டிற்குத் தலைவனும், மலையில் வாழ்பவனும், சிற்றரசனுமாய் இருந்து, கொடையில் பெருவள்ளல் என்று பேர்பெற்று விட்டான் என்றும்; அழியாப்புகழை அடைந்துவிட்டான் என்றும் கேள்விப்பட்ட பேரரசரிற் சிலரும், சிற்றரசரிற் பலரும் அழுக்காறடைந்தார்கள். பேரரசருள் மிகுதியும் பொறாமை கொண்டவன் சேரமான் பெருஞ்சேரல் இரும்பொறை என்பவன். சிற்றரசருள் மலையமான் திருமுடிக்காரி என்பவன். இங்ஙனம், அழுக்காறு கொண்டு சிலர் பகைத்தாலும் பலர் பெருமையுடன் போற்றும்படி தன் உடல் பொருள் ஆவி முதலியவை பிறர்க்குப் பயன் படுமாறு அன்புடன் வாழ்ந்து வந்தான் ஓரி.

## 6. காரி

தெய்வத் தண்டமிழ் மொழி வழங்கும் தென்னாடு, முற் காலத்தில் பல பகுதிகளாகப் பிரிக்கப்பட்டிருந்தது. அவற்றுள் பாண்டிய நாட்டிற்கும் சேரநாட்டிற்கும் சோழநாட்டிற்கும் இடையில் ஒருநாடு இருந்தது. அது, தென்பெண்ணை யாற்றங்கரையில் அமைந்திருந்தது. அந்நாட்டில் மலைகள் பல உண்டு. அக்காரணத்தால், அதற்கு மலையமா நாடு என்றும், மலாடு என்றும் பெயர்கள் ஏற்பட்டிருந்தன. அங்குள்ள மலைகளுள் மிகப் பெரியது 'முள்ளூர் மலை' என்பது. அதன் அடிவாரத்தில் முள்ளுள்ள கொடிகள் பல முளைத்து, மலையின் மேல் ஊர்ந்து செல்லும். அதனாலேயே அம்மலை முள்ளூர் மலை எனப்பட்டது. அதனை அடுத்துள்ள ஊருக்கும் முள்ளூர் என்பதே பெயர். அம்முள்ளூர் மலையில், வற்றாத நீர் அருவிகள் பல உண்டு. அதனால் அம்மலையும், மலையை யடுத்துள்ள ஊர்களும் மிகச் செழிப்புடன் இனிய காட்சிகளை நல்கா நிற்கும். மற்றும், அம்மலைநாடு, பெண்ணையாற்றின் உதவியால் பல வளங்களும் பெற்று விளங்கிற்று.

அந்த மலைநாட்டிற்குத் திருக்கோவலூர் என்பது தலைமை நகரமாக இருந்தது. சுமார், இரண்டாயிரம் ஆண்டுகட்கு முன்னர் காரி என்னும் ஓர் சிற்றரசன், திருக்கோவலூரை இராஜதானியாகக் கொண்டு அம்மலைநாட்டை ஆண்டு வந்தான். அவன் முள்ளூரிற் கோவியற் குடியிற் பிறந்தவன்; முள்ளூர் மலையில் வளர்ந்தவன் ; சிறந்த வீரன் ; குதிரை ஏற்றம், தேர் ஏற்றம், விற்பயிற்சி, வாட்பயிற்சி முதலியனவற்றை நன்கு பயின்றவன். அவன், முதலில் முள்ளூருக்கும், முள்ளூர் மலைக்கும் தலைவனாகிப் பிறகு, மலை நாட்டிற்கே

திருமுடி புனைந்து அரசன் ஆனான். அவனுடைய குதிரைக்குக் காரி என்று பெயர். அது அவனிடத்தில் மிக்க அன்புடன் இருக்கும். அவனும் அதனைத் தன் உயிர்போல் நேசித்து வந்தான்; ஒரு கணமும் அதைவிட்டுப் பிரிந்து செல்லான். அதனால் அவனுக்கும் அக்குதிரையின் பெயரே ஏற்பட்டு நிலைத்து விட்டது: அவன் பெற்றோர் அவனுக்கு இட்ட பெயர் மறைந்துவிட்டது. மற்றும் அவன் மலைநாட்டிற்குத் தலைவன் ஆனதால், அவனுக்கு மலையமான் என்னும் பெயரும் ஏற்பட்டது. ஆகவே மலையமான் திருமுடிக்காரி என்று எல்லோராலும் அவன் அழைக்கப்பட்டான். காரி சிறந்த கல்விமான்; கற்றோரைக் கண்டு களிப்படையும் குணமுடையவன். அவன், தன்னைப்போலவே தன் நாட்டிலுள்ள மக்கள் அனைவரும் கற்றவர் ஆதல் வேண்டும் என்று எண்ணினான்; அதன்படி ஊர்கள்தோறும் பள்ளிக்கூடங்கள் அமைத்தான்; பெண்களும் படித்துப் பெருமைபெற ஏற்பாடு செய்தான்; அறிவுடையோர் யாவராயினும் அவர்களை அன்புடன் வரவேற்றுஉபசரிப்பான். ஈகைக்குணம், அவனிடம் இளமையிலிருந்தேவளர்ந்துவந்தது. அதனால், அவனை அடுத்தவர் அன்புடன் மகிழ்ந்திருந்தனர். அவன் தன்னைப் புகழ்ந்து பாடிவரும் பாவலர்க்குப் பரிசுகள் பல அளிப்பான். அங்ஙனம் அளிப்பதில் அவன் பக்ஷபாதமில்லாமல் எல்லோர்க்கும் ஒரேதரமாக அளித்து வந்தான். இவ்வாறு அவன் வருபவர்களை உயர்ந்த சாதி என்றும்; தாழ்ந்த சாதி என்றும்; மிகுந்த படிப்பாளி என்றும்; குறைந்த படிப்பாளி என்றும்; பூரண அறிஞன் என்றும்; புல்லிய அறிஞன் என்றும் கூறும் வேற்றுமைகளை எட்டுணையும் பாராமல் அவர்கள் அனைவரையும் ஒரு படித்தான அன்புடன் பாராட்டிப் புகழ்ந்து பொருளைப் பாங்

குடன் பகிர்ந்து கொடுத்து வந்தான். அதைக்கண்ட கபிலர் என்னும் புலவர்பெருமான்,

" ஒருதிசை ஒருவனை உள்ளி நாற்றிசைப்
பலரும் வருவர் பரிசின் மாக்கள்
வரிசை யறிதலோ வரிதே பெரிதும்
ஈதல் எளிதே மாவண் தோன்றல்
அதுநற் கறிந்தனை யாயின்
பொதுநோக் கொழிமதி புலவர் மாட்டே."

எனப் புகழ்ந்து பாடியுள்ளார் (பு-121.)

இப்பாடலின் பொருள் :—" மிகுந்த வண்மைக்குண முடைய தலைவனே! வள்ளியோன் ஒருவன் இருந்தால், நான்கு பக்கங்களிலிருந்தும் மாக்கள் பலர் பரிசிலை நாடி அவனிடம் வருவார்கள். அவர்கள் தராதரத்தை அறிதல் மிகவும் அரிது. அவர்கட்குப் பொருளை ஈதல் மிகவும் எளிது. நீ அவ்வரிசை யறிதலை நன்கு அறிந்தாய் ஆயின், புலவர்களிடம் வரிசை கருதாது ஒருதரமாகப் பார்ப்பதை விட்டுவிடுக" என்பது. இதனால், அக்கபிலர் அவனுக்குப் "பாத்திரம் அறிந்து பிச்சை இடு" என்னும் கருத்தை அறிவுறுத்தினர்.

அங்ஙனம், புலவர் கூறியதை அவன் மனம் சிறிதும் கொள்ளாமல் மடமையிலேயே இருந்தது அவனது கொடை. அதனை வலியுறுத்தவே ஆன்றோர்,

" அறிவுமடம் படுதலும் அறிவுநன் குடைமையும்
வரிசை யறிதலும் வரையாது கொடுத்தலும்
பரிசில் வாழ்க்கைப் பரிசிலர் ஏத்த"

என்று கூறுகிறார். ஆகையால், பிறர்பொருட்டு வாழ எண்ண முடையோர் பக்ஷபாதம் சிறிதும் ஓரார் என்பது தெளிவா

கிறது. காரி, புலவர்களிடத்தில் விருப்பம் உடையவனுய் இருந்ததுபோலவே, அந்தணர்களிடத்தும் மிக அன்பு கொண்டு இருந்தான். மற்றும், வலியார் எளியாரை வருத்து வதை ஒரு கணமும் கண்டிரான்; சிற்றரசன் ஒரு வன் அநீதியாக மற்றோர் அரசன்மேல் போருக்கு எழுந் தால், அதனைக் கேள்விப்படின் வாளா இரான்; உடனே தன் படையுடன் சென்று எளியானுக்கு உதவிசெய்து அநீதி யாளனை அழிப்பான்.

இவ்வித அருங்குணம் அவன் அடைந்து இருந்தமையா லும், வலிய பெருஞ் சேனையைப் பெற்றிருந்தமையாலும், மூவேந்தரும் அவனுதவியை விரும்புவார்கள். காரியும் அவர் கள் அழைக்குந்தோறும் சேனையுடன் சென்று அவர்கள்மேல் போருக்குவரும் பகைவரை ஒழித்து மூவர் பக்கல் வெற்றி நாட்டுவன். இங்ஙனம், அவன் மூவேந்தர்க்கும் வெவ்வேறு காலத்திற் சென்று செய்த உதவிகள் பல; அவர்களும், அவன் உதவியைப் பெறும் காலந்தோறும் பல பொருட்களைப் பரிசி லாகவும், ஜ்ஞாபகார்த்தமாகவும் அவனுக்கு நல்குவார்கள். அங் ஙனம் பெறும் செல்வத்தையும் தன்னுடையதாகக் கொள்வ தில்லை காரி. அவன் தன் இல்லத் தலைவியே தன் பொருள் என் றும்; மற்றையவை பிறர் பொருள்என்றும் எண்ணிஇருந்தான். அவனன்றோ, தெய்வத் திருவள்ளுவனுர் கூறியருளிய "அன் புடையார் என்பு முரியர் பிறர்க்கு" என்னும் திருவாக்குக்கு இலக்காவான்.

சோழநாட்டு வேந்தர் பரம்பரையில் வந்த சிற்றரசர்கள் பலர். அவர்களுள் பெருநற்கிள்ளி என்பவன் ஒருவன் அவன் கோழி என்னும் உறை ஊரை ஆண்டுவந்தான்.

அப் பெருநற்கிள்ளியின் காலத்தில், சேரவரசர் பரம்பரையில் தோன்றிய, யானைக்கண் சேய் என்னும் சிற்றரசன் ஒருவன் இருந்தான். அவன் மேல்கடற்கரையில் உள்ள தொண்டி என்னும் ஊரை ஆண்டுவந்தான்.

அத்தொண்டி வேந்தன் உறையூரைக் கைப்பற்றிக் கொள்ள எண்ணினான். அதனால், அவன் கிள்ளியைப்பகைத்துக் கொண்டு, உறையூரின்மீது அநீதியாகப் படை எடுத்துச் சென்றான்; கிள்ளியோடு பலமான சண்டை செய்தான். அப்போரில் கிள்ளிக்குப் பெருநஷ்டம் உண்டாயிற்று. முடிவில் தோல்வியும் இறப்புங்கூட ஏற்படும்போல் அவ்வமர்நிலை தோற்றியது.

இங்ஙனம், யானைக்கண்சேய் கிள்ளியோடு போர் செய்வதைக் காரி வேந்தன் கேள்விப்பட்டான். காரி, கிள்ளிக்குப் பழைய நண்பன். உடனே அவன், தன் நண்பனுக்கு உதவி புரிய வேண்டும் என்று எண்ணினான்; பெருஞ் சேனையுடன் உறையூர் அடைந்தான்; கிள்ளிக்கு உதவி செய்து, யானைக்கண் சேயைத் துரத்தி யடித்தான். அதனால், தொண்டியரசன் பணிந்து தோற்றோடிப்போனான். கிள்ளியோ காரியின் உதவியால் வெற்றிபெற்றான்; பிறகு, ராஜசூய யாகமும் செய்து, இராஜசூயம் வேட்ட பெருநற்கிள்ளி என்னும் புகழ்ப்பெயரும் பெற்றான். காரி, இவ்வாறு பரோபகாரம் செய்து "உடுக்கை இழந்தவன் கைபோல ஆங்கே, இடுக்கண் களைவதா நட்பு" என மொழிந்த திருவள்ளுவரின் அறநெறிக்கு இலக்காயிருந்தனன்.

இப்படிக் காரி வேந்தன், பிறர்க்கு நலம் புரிவதே தனது கடமையாகக்கொண்டு வாழ்ந்து வருநாளில், வடநாட்டில் அரசர்களாய் இருந்த ஆரிய வேந்தர்கள், சிறுகச் சிறுகத் தென்னாட்டின்மேல் படை எடுக்கலானார்கள்; அப்படிப் படை

எடுத்துவந்த அவர்கள், திருக்கோவலூரினது செழுமையைக் கண்டார்கள்; அதனைப் பற்றிக்கொள்ள எண்ணினார்கள்; உடனே திரண்ட சேனையுடன் வந்து திருக்கோவலூரைச் சூழ்ந்து, முற்றுகை யிட்டார்கள்.

அது, காரிக்கு எட்டியது. ஆயினும், அவன் சிறிதும் அஞ்சவில்லை. உடனே சேனைகளைச் சேர்த்துக்கொண்டு, தானும் போர்க்கோலம் பூண்டான். இரு கூட்டத்தாரும் பலநாள் சண்டையிட்டார்கள். முடிவாகக் காரி, தன் வாட் படையால் ஆரியர் படைகளைச் சின்னபின்னப் படுத்தினான். அதனால், ஆரியர் பலர் மாண்டனர்; மறைந்தோடினர் சிலர்; தெரிந்து ஓடினர் பலர். அவர்கள் மீண்டும் திருக்கோவலூரைக் கருத்திலும், கனவிலும் கருதாவண்ணம் அஞ்சியோடினார்கள். அதனை நற்றிணை என்னும் நூல்—

"ஆரியர் துவன்றிய பேரிசை முள்ளூர்ப்
பலருடன் கழித்த ஒள்வாள் மலையனது
ஒருவேற்கு ஓடி ஆங்கு"

என்று கூறுகிறது.

இதன்பொருள்:—ஆரியர் நெருங்கிச் செய்த போரில், பெரிய புகழையுடைய முள்ளூர்ப் போர்க்களத்தில், பலருடன் சென்று உறையினின்று உருவிய ஒளி வீசும் வாட்படையை உடைய மலையனது வேற்படைக்கு அஞ்சி அவ்வாரியப்படை ஓடியது என்பது.

இவ்வகை, ஆரியர் தோற்றோடும்படி காரி அவர்களைத் துரத்தியடித்தமையால், அவற்குப் பெரும்புகழ் உண்டாயிற்று. அது ஏனைய நாடுகளிலும் பரவியது.

ஒருநாள், ஓர் புலவர் காரியைப் புகழ்ந்து பாடிக்கொண்டு அவன் திருமனையை அடைந்தார். அப்போது காரி, தன்னை

எளியரும் காணும்படி வெளியிடத்தில் அமர்ந்திருந்தான்; தன்னைப் புகழ்ந்துபாடும் புலவரை எதிரில் கண்டான்; உடனே எழுந்து சென்று தன் தேரை அவரிடம் ஒப்படைத்து, "அருங்கலைப்புலவ! தாங்கள், தங்கள் திருவடிகள் வருந்த நடந்துவந்தீர்கள்; மீண்டும் அவ்வாறு நடவற்க; இத் தேர்மேல் இவர்ந்து இன்பமாய்ச் செல்க." என்று மிக்க மகிழ்ச்சியுடன் கூறி; மற்றும் வேண்டிய பொருள்கள் பல வளித்து அனுப்பினன். அதனை நேரிற் கண்டிருந்த கபிலர் பெருமான்,

"நாட்கள் உண்டு நாண்மகிழ் மகிழின்
யார்க்கும் எளிதே தேரீ தல்லே
தொலையா நல்லிசை விளங்கு மலையன்
மகிழா தீத்த விழையணி நெடுந்தேர்
பயன்கெழு முள்ளூர் மீமிசைப்
பட்ட மாரி யுறையினும் பலவே"

எனப் புகழ்ந்துள்ளார். (பு-123)

இதன் பொருள்:—உலகிலுள்ள மக்களுள் சிலர் தேன் உண்கிறார்கள்; அதனால் மதிமயங்கிப் போகிறார்கள்; அவ் வமயம் அவர்கள் இன்னது செய்யவேண்டும், இன்னது நீக்க வேண்டும் என்று ஓராமல் என்னென்னவோ செய்துவிடுகின் றார்கள். அச்செயல்களுள் கொடைச் செயலும் ஒன்று. வெறிகொண்டபோது அளவு கடந்த கொடை செய்வது குடியர் எல்லோருக்கும் இயல்பு; தேர் முதலிய பெரும் பொருள்களையும் அளிப்பார்கள். அங்ஙனம் மயக்கச் சேர்க் கையால் செய்யும் கொடை இயற்கைக் கொடையாகாது; செயற்கைக் கொடையே யாகும். அவ்வாறு காரி, செய்பவன் அல்லன்; இன்று காலையில் புதியதாய்க் கொணர்ந்த தேனை

உண்டான்; ஆனால், அதன் மயக்கத்திற்கு ஆட்படவில்லை. அதுவும் அவன் மதியை மயக்கவில்லை. அவன் நல்லுணர் வுடனே தேரைப் புலவர்க்கு அளித்தான். அவ்விதம், அவன் தேரை அளிக்கையில் வெறியர்போல் மகிழவும் நகைக்கவும் இல்லை. ஆகையால், அக்கொடை இயற்கையைச்சாரும். அங்ஙனம், அவன் புலவருக்கு அளித்த தேர்கள், அவ னுடைய முள்ளிமலையின்மேல் விழும் மழைத் துளியினும் பல வாம் என்பது.

அவன் தேர்க்கொடை மிகுதியாய்ச் செய்து வந்தமை யால் அவனுக்குத் தேர்வண்மலையன் என்னும் பேரும் ஏற் பட்டது.

காரிக்குக் கொடையாலும், படையாலும் வரவரப் பெரும் புகழ் வளர்வதைக்கண்ட சில சிற்றரசர்கள், அவன் மீது அழுக்காறு கொண்டார்கள். சில குறுநில மன்னர் சூழ்ச் சியால், அஞ்சிக்கும் காரிக்கும் பகைமை நேர்ந்தது. அவனும் சிறந்த வீரன்; பெருந்தீரன். ஒருகாலத்தில் மூவேந் தரும் அவன்முன் நின்று போர் செய்யமாட்டாமற் புறங் கொடுத்தோடினர். அங்ஙனம் ஆற்றல் படைத்த அஞ்சி, காரியின்மேல் படையெடுத்துத், திருக்கோவலூரை முற்றுகை யிட்டான். காரியோ அஞ்சியின் சேனையைக்கண்டு அஞ்சி னன். ஆயினும், தன்னிடம் உள்ள சேனைகளைக்கொண்டு எதிர்த்து அவனோடு போர்செய்து பார்த்தான்; தனக்கு வெற்றி ஏற்படாது என்று உணர்ந்துகொண்டான்; அவன் சேனைகளுள் மிகுதியும் மாண்டொழிந்தன. முடிவில் காரி, 'தலைக்கு வந்தது தலைப்பாகையோடு போயிற்று' என்பது போலத் தன் உயிர் தப்பினால் போதும் என்றெண்ணித் திருக் கோவலூரை விட்டுவிட்டுச் சேரநாட்டிற் புகுந்தொளிந்தான்.

பிறகு, அஞ்சி திருக்கோவலூரைப் பிடித்துக்கொண்டு, தன் நாட்டுடன் சேர்த்தாள்வானாயினன்.

அப்போரில், அஞ்சிக்கு முதுகுகாட்டிப் புறம் போகிய காரியரசன் சேர நாடடைந்தான்; பெருஞ்சேரல் இரும் பொறையைக் கண்டான்; தனக்குற்றதை அவனுக் குரைத் தான். அச்சேரனும் காரியை ஏற்றுக் கொண்டான்; நல்லுரை பல நவின்றான்; மீண்டும் அவன் நாட்டை அதிகனிடமிருந்து மீட்டுத் தருவதாய் வாக்களித்தான்.

காரியும் சற்று மனந்தேறினான். ஆயினும், அவன், தனது நாட்டைப் பெறுங்காலம் நோக்கிச்சாலத்துயர் உற்றிருந்தான்.

பெருஞ்சேரல் இரும்பொறைக்கு ஓரியின்மேல் வெறுப் புண்டென்று முன்பே கூறினம் அன்றோ? அவன், காரி யைக்கொண்டு ஓரியைத் தொலைத்துவிட எண்ணினான்; உடனே காரியை அழைத்தான். "ஐய, என்மனத்துள் ஓர் கவற்சி குடிகொண்டுளது. அதுதான், என்னுடைய சேனைக் குத் தகுந்த தலைவன் இல்லாமையாகும். அக்குறையால், எனக்கு அடங்காமல், அகங்காரம் கொண்டு வீர முழக்கஞ் செய்யும் ஓரியை ஒழிக்கச் சேனையை அனுப்பாமல் இருக்கி றேன். நானே தலைமை வகித்துச்செல்லுதல் தகாது. ஏனென் றால், அவன் எனக்குச்சமமான பலமுடையவன் அல்லன். சம பல மில்லாதவனுடன் பொருது வெற்றியுற்றாலும், தோல்வி யுற்றாலும் வசையே ஒழிய இசையேற்படாது. அதனை அற நூற்களும் மறுத்து—

"இசையும் எனினும் இசையா தெனினும்
வசைதீர எண்ணுவர் சான்றோர்—விசையின்
நரிமா உளங்கிழித்த அம்பினிற் றீதோ
அரிமாப் பிழைப் பெய்த கோல்—" என்றும்;

"கான முயலெய்த அம்பினில் யானை
பிழைத்தவேல் ஏந்த லினிது—"என்றும்

கூறுகின்றன" என்றான்.

இரும்பொறை இவ்வாறு கூறக்கேட்ட காரி, "அங்ஙனமே என்னைச் சேனைத்தலைவனாக்கி அனுப்பினால், அவ்வோரியை ஒழிப்பேன்." என்று பணிவுடன் கூறினான். அதனால், பெருமகிழ்ச்சி கொண்டு சேரன், பெருஞ்சேனையைத் திரட்டிக் காரிவசம் ஒப்படைத்தான்.

"செருக்கெழு மன்னர் திறலுடையார்ச் சேர்ந்தார்
ஒருத்தரை யஞ்சி உலைதலும் உண்டோ

என்றபடி காரி அஞ்சாது, பேரரசன் சொற்றுணையையும், திரண்ட சேனைத் துணையையும் கொண்டு சென்று, கொல்லி மலையைச் சூழ்ந்துகொண்டான்.

ஓரியும் காரியோடு பலநாள் போர் செய்தான். அதனை சிறுபாணாற்றுப்படை "காரிக்குதிரை காரியோடு மலைந்த ஓரிக் குதிரை ஓரியும்"—என்று கூறுகிறது.

பின்னர் ஓரி, இப் போர் சேரனால் ஏற்பட்டது என்றறிந்து கொண்டான். வலியர் ஒன்றுகூடிப் போந்து ஓரியுடன் பொருவது, வளப்பம் மிக நல்கும் இக் கொல்லியைக் கொள்ளும் பொருட்டே அம்மலை அவர்கட்கு வேண்டுமாயின் நேரிற்சென்று கேட்டால் சாலக்களிப்புடன் தருவன். அவர்கள் அங்ஙனம் பெற உடன்படவில்லை. ஓரியை உயிருடன் உலகில் வைக்கவும் மனங்கொள்ளவில்லை. ஆகையால், காரி மிகத் தந்திரமாக ஓரியை விண்ணாட்டிற்கு வழி கூட்டினான். ஓரியும், தேவர் ஏவல்புரிய பொன்னாடு பொருந்தினன்.

அதனை, நற்றிணையுள் (320),

" ஓரிக்கொன்ற ஒரு பெருந்தெருவின்
காரிபுக்க நேரார் புலம்போல்"

என்று கபிலரும்.

கல்லாடனார் அகநானூற்றுள்,

" முள்ளூர் மன்னன் கழறொடிக் காரி
செல்லா நல்லிசை நிறுத்த வல்வில்
ஓரிக் கொன்று சேரலற் கீத்த
செவ்வேல் பலவின் பயங்கெழு கொல்லி"

என்றும் குறித்துப் பாடியுள்ளார்கள்.

ஓரி அகன்று விட்டதைக் கேள்விப்பட்ட இரும்பொறை தனது கவலையை ஒழித்தான் ; காரிக்கு உதவி செய்ய முற்பட்டான் ; உடனே பெருஞ்சேனையைத் திரட்டிக்கொண்டு புறப்பட்டான்; அதிகமான் தனக்குச சமான பலமுடையவன் ஆகையால், இரும்பொறையே சேனைத்தலைவனாய் அமர்ந்து, அதிகமான் மேல் படை எடுத்தான். அவன் சேனைகள் தகடூரை முற்றுகையிட்டன. அப்போது, அதிகன் அஜாக்கிரதையாக இருந்தான். அதனால் இரும்பொறை, அதிகனை விண்ணாட்டிற்கனுப்பி, அவனது மண்ணாட்டைப் பிடித்துக் கொண்டு தன்னுடையதாக்கிக் கொண்டான்.

அதிகமான் இறந்த செய்தி ஒளவையாருக்கு எட்டியது. உடனே, அவர் விரைந்து எழுந்து, அவன் இறந்து பட்ட போர்க்களம் சென்றார் ; அவன் உடலைக் கண்டார் ; துயர மீக்கூர " அந்தோ ! விறகால் அடுக்கப்பட்ட ஈமத்தீ இவன் உடலை எரித்தாலும், இவன் பெற்ற புகழை எரிக்காது. இனி, இவன் இல்லாமல் கழிகின்ற காலையும் மாலையும் எமக்கு இல்

லாமல் ஒழிக. யான் உயிர்வாழும் நாளும் எற்குப் பயன் படாது ; ஆதலால் அந்நாளும் இல்லாதொழிக. இனி, இவன் அறிகுறியாக நாட்டப்படும் கல்லின்மீது பீலியைச் சூட்டி நாரினால் வடித்த இனிய தேனைப் பொழியினும் கொள்வா னோ? கொள்ளான். ஏனெனில், சிகரமுயர்ந்த பெரிய மலை பொருந்திய நாடு முழுவதும் கொடுப்பினும் கொள்ளாத குண முடையவனன்றோ அவன்? அவனது மார்பத்தின்கண் தைத்தவேல், இரப்பவர் கையுளும் தைத்துருவிப் பின்பு, கண் ணின் பாவை ஒளிமழுங்க அழகிய சொல்லை ஆராயும் அறி வினையுடையோர் நாவின் கண்ணே போய் வீழ்ந்தது. இனிப் பாடுவாரும் இல்லை. பாடுவார்க்கு ஒன்றீவாருமில்லை. குளிர்ந்த நீரையுடைய துறையிலே மலர்ந்து சூடப்படாமற் கழியும் பகன்றைப் பூவைப்போல் பிறர்க்கு ஒரு பொருளைக் கொடுக் காது மாய்ந்துபோம உயிர் மிகப் பலவாம்" என்று வருந்தினர்.

அரிசில்கிழார் அவன் இறந்ததைக் கேள்விப்பட்ட வுடனே, "அறமில்லாத கூற்றமே! வாழ்தல் ஏதுவாக வரும் வயலிடத்து விளையும் வருவாயை அறியானாய்த் தளர்ந்த குடியை உடைய உழவன், விதையை உண்டாற்போல, இந்த ஒருவனது பெறுதற்கரிய உயிரை உண்டிலையாயின், அவன் போரில் பகைவரைக் கொல்லும் களத்தின்கண் பலஉயிரையும் பருகி நிறைவை" என்று கூற்றுவனைப் பழித்து வருந்தினர்.

அதிகன் அழிந்த பிறகு, காரி தன்னுடைய திருக்கோவ லூரை அடைந்து பண்டுபோல், பலபேர்க்கு உபகாரியாய் அரசு வீற்று வாழ்ந்து இருந்தான்.

# 7. பாரி

நீர்வளத்திலும் நிலவளத்திலும் மிகவும் சிறந்தது தமிழ் நாடு. இதனைத் தொன்றுதொட்டுச் சேர சோழ பாண்டியர் என்னும் முடியுடை தமிழ் வேந்தர்கள் ஆண்டு வந்தார்கள். அவர்கட்கு அடங்கியும், அடங்காமலும் பல சிற்றரசர்களும் ஆங்காங்கு இருந்தார்கள்.

பாண்டிய நாட்டிற்கு வடமேற்கில், சேர நாட்டிற்கு அருகாக ஓர் மலை உள்ளது. அதற்குப் பறம்புமலை என்று பெயர். அதனை இக்காலத்தில் பிரான் மலை என்று பலரும் பாம்பு மலை என்று சிலரும் கூறுகிறார்கள். அக்காலத்தில் நாடுகளுக்கு அந்தந்த இடத்தில் உள்ள சிறந்த மலைகளின் பெயர்களையே, பெயர்களாக இட்டுவழங்குவது வழக்கம். அதைப்போலவே பறம்பு மலை உள்ள நாட்டிற்கும் பறம்பு நாடு என்றே பெயர். அந்நாடு முந்நூறு ஊர்களை உடையது. அதனை வேளிர்குலத்தின் வழி வந்த சிற்றரசர்களே பல்லாண்டுகளாய் ஆண்டு வந்தார்கள். அவர்களுள் பெரும்பான்மையோர் முடியுடை வேந்தர்க்கு அடங்கியும், அவர்களுடன் அன்பு கொண்டும் வாழ்ந்து வந்தார்கள்.

சுமார் இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன் அப்பறம்பு நாட்டை ஆண்டுவந்த சிற்றரசர் நற்குடியில் பாரி என்னும் பெயரை உடைய ஓர் ஆண்மகன் தோன்றினன். அவன் வேளிர் வழிவந்தவன் ஆகையால், அவனை வேள் பாரி என்றும், பாரிவேள் என்றும் அழைப்பர். அவன் நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாக வளர்ந்து வந்தான். "விளையும் பயிர் முளையிலேயே தெரியும்" என்னும் பழமொழிக்கு இணங்க, அவன் இளமையிலேயே இனிய தோற்ற

மும், இன்சொல்லும், கம்பீரநடையும் உடையவனாய் இருந் தான். மற்றும் கல்வியறிவைப் பெறுவதில் ஊக்கமும், உணர் வும், அக்கரையும், ஆற்றலும் உடையவனாயிருந்தான். பிறகு, தண்டமிழ் இலக்கிய இலக்கணங்களை முறையே ஒருவாறு படித்து முடித்தான். அதற்குள் அவன், அப்பறம்பு நாட் டிற்கு அரசனாக்கப்பட்டான்.

பாரி அரசனாக வந்த பின்பும் குடிகளிடத்தில் மிகவும் அன்புடையவனாய் இருந்தான். குடிகளும் அவனைப் பொன் னேபோல் போற்றி அன்புடன் பாராட்டி வந்தார்கள். அவன், தன்னாடு பல துறைகளிலும் முன்னேற்றம் அடைவதற்குத் தகுந்த வழிகளைக் காண்பான்; அவற்றை நிறைவேற்ற மேன் மேலும் முயற்சிப்பான். இங்ஙனம், அவன் முயன்றமையால் அவன் குடிகள் முன்னையினும் பன்மடங்கு நலமுற்று இன்பந் துய்த்தார்கள். பிறநாட்டிலிருந்து வருபவர்களையும் அங் ஙனமே அன்புடன் காத்து வந்தான் பாரி. ஆதலான், அவன் குடிமக்கள் எல்லோராலும் நன்கு புகழப்பட்டான்.

பொதுவாகவே, மக்கட்பிறப்பை அடைந்தவர் எல்லோ ரும் தம்முடம்பில் நல்ல பலமுடையவர்களாய் இருத்தல் வேண்டும். அது இருந்தால்தான் ஏனைய வேலைகளைச் செய்ய வும், கல்வியறிவைப்பெறவும், பொருளையீட்டவும், அறத்தைச் செய்யவும், இன்பத்தைப் பெறவும் முடியும். அன்றியும், ஒரு கூட்டத்திற்குத் தலைவனாகவும், ஓர் நாட்டிற்கு அரசனாக வும் இருப்பவன் மிகுந்த உடல்வலி பெற்றிருக்கவேண்டும். அங்ஙனம் அடைந்தால்தான், தனக்குக் கீழ் உள்ள மக்களை யோ, அவர்கட்கு இடையூறு செய்யவரும் பகைவரையோ அடக்கியாள முடியும். இப்படிப்பட்ட உடல் வலியின்

சிறப்பைப் பாரி நன்கு உணர்ந்திருந்தான். ஆகையால், அவன் தனது நாட்டில் ஊர்கள்தோறும் சிலம்பு கூடங்கள் ஏற்படுத்தினன் ; வாலிபரைச் சிறந்த வித்தைகளில் பயிலச் செய்தான். அவர்களும் பலவகையான தேகப்பயிற்சிகளை நாடோறும் செய்து சிறந்த வீரர்கள் ஆனார்கள். அத்தகைய வீரர்களை யடக்கியாள்பவன் அவர்களினும் சிறந்து இருக்க வேண்டுமன்றோ ? தலைவன் அறிவாற்றலினும், உடற் பலத்தினும் மிகுதியும் மேம்பட்டவனாய் இல்லாவிட்டால், அவனுக்குக் கீழுள்ளவர்கள் அவனைப் பலவழிகளினும் ஏமாற்றி விடுவார்கள். தலைவனும், சீரும் சிறப்பும், பேரும், புகழும் பெறல் முடியாது. ஆகையால் பாரியும், தன் நாட்டு வாலிப வீரர்களைவிடத் தான் சிறந்து விளங்கவேண்டும் என எண்ணிப் பலநாள் முறையே முயன்று உறுதியான உடல் வலிமை பெற்றுச் சிறந்த வீரனாய் விளங்கினான். இங்ஙனம் அவனும், அவனுடைய நாட்டு வாலிபரும் வீரர்களாய் இருந்தமையால், பகற் கொள்ளை, இராக் கொள்ளை, தீவர்த்திக் கொள்ளை முதலிய தீயகுணக் கூட்டத்தாரும், நாடு பிடிக்கும் பேராசை பூண்ட அயல்நாட்டு வேந்தரும், அவர்கள் வீரரும் தத்தம் செயலொழித்துப் பாரிக்கு அஞ்சி வாளாவிருந்தார்கள். தவிர அத்தீயருள் சிலர், தமது கொடுஞ்செயலையும் ஒழித்து நன்னெறி பற்றி நடக்கலாயினர். ஒருவன் சிறந்த தேக பலம் பெற்றிருந்தால், அவன்முன் வாழும் கயவரும் தாமே நல்லவராய் மாறி விடுவார்கள் என்பதற்குப் பாரி உதாரணமாக இருந்தான்.

கடவுள் இவ்வுலகை உண்டாக்கினார். அவர் எங்கும் இருக்கிறார் ; எப்பொருளினும் இருக்கிறார். அவர் நமக்கு மறைந்திருக்கிறார். அவர் நம்மைப் படைத்து நம்மோடு

இருந்து வருகிறார் ; நாம் கண்டு களிக்கப் பல இனிய இயற்கைக் காட்சிகளைக் காலங்கள்தோறும் உண்டாக்குகிறார் ; நல்லொழுக்கத்தில் நடப்பவர்களுக்கு மிகுந்த இன்பம் கொடுக்கிறார். ஆகையால், அவர் மனம் மகிழும்படி நாம் நடந்து கொள்ளல் வேண்டும். அதாவது, பட்டினி கிடந்து நீரில் மூழ்கி மூக்கைப் பிடித்து ஏதோ ஒன்றை ஓதுவது அன்று ; பாடித் திரிவதுமன்று. ஆலயங்கள் தோறும் சென்று காணிக்கை செலுத்தி, அலைந்தும், ஆடியும் திரிவதன்று. தோத்திரப் பாடல்களைப் பாராயணம் பண்ணுவதன்று. மற்றும் இவை போன்ற எந்தச் செயலாலும் கடவுள் மகிழமாட்டார். பின்னை எதனால் மகிழ்வார் என்றால், மக்களாய்ப் பிறந்தவர் எவரும் தம்மினும் பல வழியில் தாழ்ந்துள்ள ஏழை எளியர் முதலியோரிடம் இரக்கங்காட்டி, அவர்களைத் தம்முடலாலும், பொருளாலும், சொல்லாலும் கூடுமான நன்மை செய்வதனாலேயே மகிழ்வர். எங்கும் இருக்கும் கடவுள் அவ்வேழை எளியர் உள்ளத்திலும், உடலிலும் இருப்பானன்றோ? அவர்கள் மனம் களிப்படையுமானால், அவர்களது உள்ளத்தைக் கோயிலாகக்கொண்டுறையும் இறைவனும் களிப்படைவான். ஆகவே, உடற்பலமும் சொற்பலமும் பொருட்பலமும் உடைய ஒவ்வொருவருக்கும் இந்தச் சீரியகுணம் இருத்தல் வேண்டும். இக்குணத்தைப் பெறாதவர்கள் முற்கூறிய ஏனையவற்றைப் பெற்றிருந்தாலும் பெறாதவர்களே ஆவார்கள் ; கடவுள் அன்புக்கும் பாத்திரமாகார்கள்; இம்மைப் பயனாகிய பெரும்புகழையும் எய்தாதொழிவார்கள். இந்த மனிதக் கடமையாகிய நற்குணம் பாரியது உள்ளத்தில், அவன் இளமையிலிருந்தே வளர்ந்து வந்தது. அதனால், அவன் தன்னிடம் வரும் ஏழை எளியரையும், பாணர் பாவலரையும்

அதிக அன்புடன் ஆதரித்து, அவர்கள் வேண்டிய பொருளைக் கொடுத்து வந்தான். எங்ஙனம் கொடுத்தான் என்றால், கேட்டவர்கள் 'போதும் போதும்' என்று சொல்லுகிறவரையில் வாரிவாரிக் கொடுத்தான் என்றே சொல்ல வேண்டும். அதுவும், சிலர் கேட்பதற்கு முன்னமே அவர்கள் முகக்குறிப்பும், அகக் குறிப்பும் கண்டபோதே அறிந்து கொடுத்தான். மற்றும், அவன் நம் தண்டமிழ் மொழியில் மிக்க ஆர்வமும், அது, நாடெங்கும் பரவவேண்டும் என்ற செம்மனமும் உடையவன் ஆகையால், தன்னையும், தன் நாட்டையும் புகழ்ந்து பாடிவரும் பாவலர்களாகிய பரிசிலர்க்கு இவ்வளவுதான் ஈந்தான் என்று அளவு கூறமுடியாது.

"காதவழிப் பேரில்லான் கழுதையோடொக்கும்" என்னும் பழமொழிக்குப் பாரி இலக்காகாமல், அவன் பேரும்புகழும் அவனுடைய குடிமக்களால், இப்பழமொழியினும் பல மடங்கு விஸ்தீரணமுள்ள அப்பறம்பு நாடு முற்றும் போற்றப் பரவின; அவ்வே நில்லாமல், புலவர் பெருமக்களால் பிறநாடுகளிலும் சென்று, முடிவில் தமிழ் நாடெங்கும் காற்றுப்போல் பரந்து விளங்கின. இங்ஙனம், தந்நாட்டவரும் பிறநாட்டவரும் புகழ்ந்து பாராட்டும்படி வாழ்வதுதான் மக்கள் வடிவங் கொண்டோர் இம்மையில் அடையும் பெரும்பயன் ஆகும்.

நம் நாட்டில், ஒருவன் நன்முயற்சியால் பெரும்புகழை அடைவானேயானால், நாம் அவனைக் கண்டு, பாராட்டிக் களிப்படைய வேண்டும். அதுவே அறிவுடையோர்க்கழகாகும். அவ்வாறின்றி அவன்மேல் பொறாமை கொள்வதும், அவனைக் கெடுக்கமுயல்வதும், மிகவும் மடமையும் இழிவுமாகும். மற்றும் அதனால், நமக்கு வசையும் அவனுக்கு இசையுமே வளரும்.

ஆகவே, நாமும் புகழ் அடைகின்ற ஒருவனைப் பார்த்தேனும் அவனைப்போல் முயன்று நல்லிசையைப் பெற நற்றுறையில் முயலல் வேண்டும்.

பாரியது புகழ் அழியாத நிலையில் தமிழ் நாடெங்கும் பரவி விட்டதை, முடியுடை வேந்தர் மூவரும் அறிந்தார்கள்; அறிந்ததும் என்ன செய்தார்கள்? அவன் மேல் அடங்காத அழுக்காறு கொண்டார்கள். மூவர்க்கும் இவ்வெண்ணம் ஒருங்கே உண்டாயிற்று. அதனால், அவர்கள் மூவரும் ஒன்று கூடினார்கள். "பாரி என்ன ! ஓர் அற்பச் சிற்றரசன்; அவனுக்கு அவ்வளவு புகழா! நம்மினும் சிறந்தவனாக யாவராலும் கருதப்படுகின்றான்; நாம் அவனை விட்டுப் பேரரசனாக இருந்தும் யாது பயன்? இனி, அவன் இவ்வுலகில் இருக்கும் வரையில் நாம் பெரும்புகழ் அடைய முடியாது. ஓர் புலவரும் நம்மிடம் வாரார். ஆகையால், ஒன்றையும் எண்ணாது அவனை விண்ணாட்டிற்கு அனுப்புதலே நன்றாகும்'' என்று தீர்மானித்தார்கள். அதன்படி செய்ய மூவரும் தத்தம் நாடு சேர்ந்து சேனைகளைத் திரட்டினார்கள்; பாரி மிக மேலான போர் வீரனாகையால் வெவ்வேறு தந்திரங்களையும் தம் படை வீரர்க்குக் கற்பித்தார்கள்; பிறகு, ஓர் நாளைக் குறிப்பிட்டார்கள். அந்நாளில் மூவேந்தர் சேனைகளும் ஒன்று கூடின; அணி வகுப்புகள் செய்யப்பட்டன; பிறகு, சென்று பறம்பு நாட்டைச் சூழ்ந்துவிட்டன.

பாரியும் அதனை யறிந்தான்; ஆயினும், சற்று மஞ்சவில்லை; சிறிதும் சலியவில்லை; உடனே தன் வீரரைத் திரட்டிப் போருக்கெழுந்தான். இருதிறத்து வீரரும் பலநாள் பொருதனர். முடிவில் மூவேந்தர் சேனைகள் முறிந்தன; சிதறுண்

டன. அந்தோ! அப்போருக்கு வந்த மூவேந்தர் சேனையுள் மடிந்தவர்களை வருத்துக்கூற எம்மால் ஆகாது, ஆகாது. ஐயோ! மனமும் துணியவில்லை. ஆயினும் சிறிது கூறுவாம்.

"வாளா மாண்ட மனிதர் தொகுதி
எண்ணி எண்ணி எரிகிற தென்னுளம்
அவர்க்குள், தாய்க்கொரு
புதல்வராய் வந்த சிறுவர் எத்தனைபேர்!
வதுவை முற்றுறு மைந்தர் எத்தனைபேர்!
புதுமணம் புரிந்த புருஷர் எத்தனைபேர்!
நொந்தசூல் மனைவியர் நோவு பாராது
வந்திவண் அடைந்த மனிதர் எத்தனைபேர்!
தாய்முகம் வருந்தல் கண்டமும் தன்சிறு
சேய்முகம் மறவாச் செனகர் எத்தனைபேர்!
செயிர்உற முழுந்தாள் சேர்ந்தமும் பாலரைத்
துறந்த மாந்தர் எத்தனைபேர்!"

இவ்வாறு, தம் படை வீரர்கள், பாரியின் படையால் சிதறடிக்கப்பட்டுப் போனமையைக் கண்ட மூவேந்தர்களும் வலியற்றவர்களாய் எஞ்சிய வீரர்களுடன் தந்நாடு திரும்பினார்கள். பின்னர், அவர்கள் தம் வெற்றி அற்றதால், மாளா வருத்த முற்றார்கள். அதனால், அவர்க ளுள்ளத்தில் பாரியினிடம் முன்னையினும் முனிவுபொங்கிற்று. அவர்கள், எவ்வகையிலாவது அவனை யொழிப்பதே தமது கடனாகக் கொண்டு, அதற்கு ஏற்ற அற்றம் நோக்கி ஏங்கி இருந்தார்கள்.

பாரி, தன் படை வீரர்களைப் பாராட்டிப் புகழ்ந்தான்; அவர்கட்கு வேண்டிய பரிசுகள் ஈந்தான்; அவர்களும் சாலக் களிப்பு எய்தினார்கள். அவன் "நானே வெற்றி பெற்றேன்"

என்னும் செருக்கும் இன்றி, அடக்கமுடன் தன் கடமையைச் செய்து வந்தான் நிறைந்த அறிவுடையோர்க்கு அதுவே அழகன்றோ ?

அதிகமானுக்கு ஔவையாரும், ஆய் வேளுக்கு முடமோசியாரும் உயிர்த்தோழராய் இருந்தவாறே, பாரிக்கும் கபிலர் என்னும் பெரும்புலவர், அவன் இளமையிலிருந்தே அவனுடைய உயிரினும் சிறந்த நண்பராக இருந்துவந்தார். அப்புலவர் பெருமான் பாரியின் புகழை அவ்வப்போது புகழ்ந்து பாடியுள்ளார். மற்றும், அவன் உள்ளளவும் அவனுடனேயே உறைந்து வந்தார். பாரி கல்வி யறிவிற் சிறந்து இருந்தமைக்கும் ; போரில் வென்றமைக்கும் இக்கபிலரே பெருங்காரணமாவார். போர் நீண்ட காலம் நடந்தபோது, அரணுக்குள் ளிருந்தார்க்கு வேண்டிய உணவுக்காகத் தாம் வளர்த்து வந்த புறாக்களையும் கிளிகளையும் திரள்திரளாக வெளியில் அனுப்பித் தானியங்களைக் கொணரச் செய்தார் அவர்.

வென்றி இன்றிச் சென்ற மூவேந்தர்களது உள்ளக் கருத்தை கபிலர் பெருமான் அறிந்து கொண்டார். அறிந்ததும், அவர்களுடைய கோபத்தீயைத் தனது அருட்கவி நீரால் அணைக்க எண்ணினார். எப்படியேனும் அம்மூவரின் முனிவை அகற்றிப் பாரியுடன் அவர்கள் மருவி வாழச் செய்ய வேண்டும் என்பதே கபிலரது கருத்து. ஆகையால், உடனே அவர் ஓர் அரிய பாடலை வரைந்தார். அது வருமாறு :—

"அளிதோ தானே பாரியது பறம்பே !
நளிகொண் முரசின் மூவிரு முற்றினும்
உழவர் உழாதன நான்கு பயனுடைத்தே ;
ஒன்றே, சிறியிலை வெதிரினெல் விளையும்மே ;

இரண்டே, தீஞ்சுளைப் பலவின் பல ழூழ்க்கும்மே ;
மூன்றே, கொழுங்கொடி வள்ளிக்கிழங்கு வீழ்க்கும்மே;
நான்கே அணிநிற வோரிபாய்தலின் மீதழிந்து
திணிநெடுங் குன்றம் தேன் சொரியும்மே.
வான்க ணற்றவன் மலையே ; வானத்து
மீன்க ணற்றதன் சுனையே ; யாங்கு
மரந்தொறும் பிணித்த களிற்றினி ராயினும்,
புலந்தொறும் பரப்பிய தேரினி ராயினும்,
தாளிற் கொள்ளலிர், வாளிற் றூரலன் ;
யானறி குவனது கொள்ளு மாறே,
சுகிர்புரி நரம்பின் சீறியாழ் பண்ணி
விரையொலி கூந்தனும் விறலியர் பின்வர
வாடினிர் பாடினிர் செலினே
நாடும் குன்றும் ஒருங்கீ யும்மே."

இப்பாடலின் பொருள் :—

"பாரியினுடைய பறம்பு மலையும் நாடும் பிறரால் வெல்வதற்கு அவ்வளவு எளிமையை உடையது அன்று. நீங்கள் மூவரும் வெற்றி முரசத்தை அடித்துக்கொண்டு, ஒன்றாகக் கூடிவந்து, பலநாள் முற்றுகை இட்டாலும் உங்களால் அதை வெல்ல முடியாது. ஏனென்றால், அவனுடைய மலை அகலத்தாலும் நீளத்தாலும், உயரத்தாலும் வானம் போன்றுளது. வெண்மையான தோற்றத்தையுடைய அருவிகள் பலவாய்ப் பிரிந்து ஓடுவதற்குக் காரணமாயுள்ள நீர் நிறம்பிய சுனைகள், வானத்தில் விளங்கும் நக்ஷத்திரங்கள் போல் உள்ளன. அவ்வருவிநீர் கீழிறங்கி ஒன்று சேர்ந்து பல கால்வாய்கள் மூலமாய்ச் சென்று பறம்பு மலையிலும் நாட்டிலும் பாய்கிறது. அதனால், உழவர்கள் உழாமலேயே, அந்த நாட்டு மக்களுக்கு

வேண்டிய உணவுப்பொருள்கள் உண்டாகின்றன. அவற்றுள் முக்கியமானவை நான்கு:—

1. மலையிடத்து ஓங்கி வளரும் சிறிய இலையை உடைய மூங்கில்களிலிருந்து நெல் விளையும். 2. மலையடிவாரத்தில் செழித்தும் படர்ந்தும் வளரும் பலாமரங்களில் காய்த்துக் கனித்து வெடித்த பழங்களிலிருந்து இனிய சுவையை உடைய சுளைகள் உதிரும். 3. நிலத்தின் வெற்றிடங்களில் கொழுந்து விட்டுத் தழைத்து ஓடும் வள்ளிக்கொடிகள் நிலம் வெடிக்கும் வண்ணம் பருத்த கிழங்குகளை ஊன்றும். 4. மலையில் பல விடங்களில் தேன் நிறம்பிய கூடுகள் பல இருக்கும். அழகிய நீலநிறமுடைய பெரிய தேனீக்கள் தேனில் வீழ்ந்து அமிழ்வதால் வழிந்து வரும் தேனும் உண்டு. இங்ஙனம், அரிசியும் கிழங்கும் பழமும் தேனும் ஆகிய நான்குடன் நீரும் என்றும் எமக்குள்ளன. ஆகையால், எம் பறம்பு மலையில் உள்ள மரங்கள் தோறும் தவறாமல் கட்டும் பெருந்தொகை கொண்ட யானையை உடையவர்களாய் இருந்தாலும், எம் பறம்பு நாட்டின் இடங்கள்தோறும் நிறுத்தும் தேர்களை உடையவர்களாய் இருந்தாலும், எம் அரசனையும் எம் நாட்டையும் எந்த முயற்சியாலும் ஒருநாளும் உங்களால், வெல்ல முடியாது. உங்கள் வாள் வல்லமைக்கஞ்சி பாரியும் பறம்பைத் தாரான். நீங்கள் பறம்பு மலையையும், நாட்டையும் பெற விரும்புவீர்க ளானல், வாசனை வீசும் நறுமண மலர்களைச் சூடிய கூந்தலை உடைய உங்கள் அன்புள்ள பெண்கள், வடித்துக் கூர்மையாக்கப்பட்ட நரம்புகளை உடைய யாழை ஏந்திக் கொண்டு இனிய பண்ணோசை ஒலிக்கப் பாடிக்கொண்டும், ஆடிக்கொண்டும் முன் வர, நீங்கள் பின் செல்லல் வேண்டும்.

அப்போது, பாரி தன்னாட்டையும் மலையையும் ஒருங்கே ஈவான்" என்பதே.

இங்ஙனம், புலவர் பெருமானாகிய கபிலர் வரைந்தனுப்பிய பாடலை மூவேந்தரும் கண்டார்கள். கண்டதும், அவர்கட்கு இன்னது செய்வதெனத் தோன்றவில்லை. முடிவில், மூவரும் ஓரிடத்தில் அந்தரங்கமாகக் கூடி ஆலோசித்தார்கள். "பகையாளி குடியை உறவாடிக் கெடுக்கவேண்டும்" என்னும் முதுமொழிக்கு இலக்கானார்கள். எவ்விதம் அவனோடு உறவு கொள்வதென எண்ண மிடலானார்கள்?

பாரிக்கு ஆண்மக்கள் இல்லை. இரண்டு சிறுமியரே இருந்தனர். அவர்கட்குப் பாரி வைத்த பெயர் இவை என்று சங்க நூற்களால் தெரியவில்லை. ஆயினும், பிற்காலத்தவர் அவர்களைச் சங்கவை, அங்கவை என்பர். அப்பெண்கள் இரட்டையராய்ப் பிறந்தனரோ என்று ஐயுறும்படி அழகு, குணம் முதலியவற்றுள் மிக்க ஒற்றுமை உடையவர்களாய் இருந்தார்கள். அவர்கள் உருவத்தின் அங்க அழகைப் பகுத்துக்கூற முடியாது. ஆயினும்,—

"யாற்றறல் அன்ன கூந்தல்; யாற்றுச்
சுழி எனக் கிடந்த குழிநவில் கொப்பூழ்;
வில் எனக் கிடந்த புருவம்; வில்லின்
அம்பெனக் கிடந்த செங்கடை மழைக்கண்;
பிறையெனச் சுடரும் சிறுநுதல்; பிறையின்
நிறையெனத் தோன்றும் கறையில் வாண்முகம்;
கிளிஎன மிழற்றும் கிளவி; கிளியின்
ஒளிபெறு வாயி னன்ன ஒள்ளுகிர்;
வேயெனத் திரண்ட மென்றோள், வேயின்

விளங்கு முத்தன்ன துளங்கொளி முறுவல்;
காந்தண் முகிழன்ன மென்விரல், காந்தள்
பூந்துடுப் பன்ன புனைவளை முன்கை "

மற்றும், ஏனைய அங்கங்களும் இங்ஙனமே ஈடும் எடுப்பும் இன்றி எழில் பெற்று விளங்கின.

இவ்விரு பெண்கட்கும் கபிலர் பெருமான் இளமையி லிருந்தே நற்கல்வி யறிவைக் கற்பித்து வந்தனர். அதனால், அவர்கள் அழகில் சிறந்து விளங்கியபடியே அறிவிலும் சிறந்து இருந்தார்கள். அன்பினும் பாரியைப்போன்றே விளங்கினார்கள்.

இவ்வித வனப்பும், அன்பும், அறிவும் ஒருங்கே அமையப்பெற்ற பெண்கள் இருவர் பாரிக்கு உளர் என்பதை மூவேந்தர்களும் அறிந்தார்கள். 'வழி தெரியாக் குருடருக்கு விழி கிடைத்ததுபோல்' பாரியை வெல்ல வழிதேடி இருந்த அவ் வேந்தர்களுக்கு அப்பெண்கள் ஓர் வழியாய்த் தோன்றினார்கள். உடனே, மூவரும் கூடிக் கலந்து பேசி, " அப்பெண்களைத் தனித்தனியாகவோ ஒருங்காகவோ மணந்துகொள்ள வேண்டும்" என்று தீர்மானித்தார்கள். அதன்படி மூவேந்தர்களும் தனித்தனியே பெண்வேண்டிப் பாரியினிடம் தூது அனுப்பினார்கள்; பிறகு ஒன்று சேர்ந்தும் பெண்களை வேண்டினார்கள். பாரியோ இவர்களினும் சிறந்த அறிவுடையவன். ஆகையால், அம்மூவரும் தனித்தனியே தூது அனுப்பிக் கேட்டபோதும், ஒன்றுகூடிக் கேட்டபோதும் அவர்கட்குத் தன் பெண்களைக் கொடுக்க மறுத்து விட்டான். ஏனென்றால், பாரிக்கு இருக்கும் பெண்கள் இருவரே. ஒருவனுக்கே இரண்டு பெண்களைக் கொடுத்துவிட்டால் மற்றிருவருக்கும் கலக்க முண்டாகும். அன்றி, ஆளுக்கு ஒருத்தியாக இருவருக்

குக் கொடுப்பின் மற்றொருவனுக்கு வருத்தம் வரும். அவ் வருத்தம் பாரிமீது கொள்வதோடு நில்லாமல், அவர்கள் தம் முள்ளும் உண்டாகும். பிறகு அது, அவர்கள் ஒற்றுமையைக் கலைத்து வேற்றுமையை ஏற்படுத்தும். உலகில் மிக ஒற்றுமை யாக வாழ்ந்த பல குடும்பத்தாரும், பல கூட்டத்தாரும், பல ஊராரும், பல நாட்டாரும், பெண்கள் காரணமாகப் பகை மை கொண்டு வேறுபட்டும், சிதறுண்டும் அழிந்தும்போனார் கள். அவ்வாறு அம்மூவேந்தர்களும் ஆகாமல், அப்போது உள்ளவாறே எப்போதும் அன்புடன் வாழவேண்டும் என்று எண்ணியே பாரி, தன் பெண்களை அவர்களுக்கு மனைவியராக்க மறுத்தனன்.

பாரி பெண்கொடுக்க மறுத்துவிட்டதன் காரணம் அவ் வேந்தர்கள் அறியார்கள். அதனால் அவர்கள், 'கேவலம் ஓர் சிற்றரசன் நம்மைச் சிறிதும் பொருட்படுத்தாமல் அவமதித்து விட்டானே' என்று மனம்புழுங்கினார்கள். சினம் மிகக் கொண்டார்கள்; மீண்டும் அவன்மேல் போருக்குப் போகச் சேனைகளை முன்னையினும் அதிகமாகத் திரட்ட ஏற்பாடு செய்தார்கள். ஆயினும், "இம்முறையும் அவனை வெல்லாமல் திரும்பிவிடின் நங்குடிகளும் நம்மை மதியார்களே" என்று ஐயுற்றார்கள்.

"எண்ணித் துணிக கருமம், துணிந்தபின்
எண்ணுவம் என்பது இழுக்கு"

என்னும் தேவர் வாக்கை உணர்ந்து, உடனே ஓர் ஒற்றனை அழைத்துப், பாரியின் நிலையை அறிந்து வரும்படி கூறி அனுப்பினார்கள்.

அத்தூதன் பறம்பு நாட்டிற்குச் சென்றான்; பாரியின் மாளிகையைக் கண்டான்; பறம்பு மலையின் மேல் ஏறினான்;

ஆங்கிருந்த அரணது சிறப்பையும், வலிமையையும் உணர்ந் தான்; மலையினது வளப்பங்களை அறிந்தான்; மற்றும் அறிய வேண்டிய எல்லாவற்றையும் ஆங்காங்கு ஆராய்ந்து அறிந்து கொண்டான்; மிக்க வியப்புடன் திரும்பி, மூவேந்தர் தங்கி யுள்ள முகாமுக்கு வந்து சேர்ந்தான். அவர்களும் அவன் வந்த வழிமேல் விழி வைத்து, எதிர் நோக்கிக் கொண்டிருந்தார்கள். அவன் வருகையைக் கண்டதும், 'அவன் என்ன உரைப் பானோ' என்று எண்ணி அவாவும், அச்சமும், ஐயமும் கொண் டிருந்தார்கள். அப்போது, அவ்வொற்றன் அவர்களை வணங்கி எதிர் நின்று, "ஒப்புயர்வற்ற எந்தமிழ்நாட்டை அந்தமுடன் ஆண்டுவரும் முடியுடை வேந்தர்காள்! நான் பறம்பு நாடு முற்றும் சுற்றிப்பார்த்தேன். எப்பக்கமும்,

பாரி பாரி என்று பல ஏத்தி
ஒருவன் புகழ்வர் செந்நாப் புலவர்;
பாரி ஒருவனும் அல்லன்,
மாரியும் உண்டு ஈண்டுலகு புறப்பதுவே.

இங்ஙனம், பாரியைப் புகழ்ந்து கூறும் கூச்சலையே அதி கம் கேட்டேன். அதுவும் பாமரர் முதல் பண்டிதர் ஈறாக எல்லாரும் போற்றுகின்றார்கள். அவர்கள் 'உலகைக் காப்பது மேகம். அம்மேகம் இல்லை என்றாலும் நம்மைக் காக்கப் பாரி யுளன்,' என்று மகிழ்ச்சியோடு வாழ்கின்றார்கள். ஏனென் றால்; அவன் எவரையும் நல்லவர் தீயவர் என்றும், ஆனவர் ஆகாதவர் என்றும், அறிஞர் அறியாதவர் என்றும், உயர்ந்த ஜாதியர் தாழ்ந்த ஜாதியர் என்றும், தன் மதத்தர் பிற மதத்தி னர் என்றும், ஆண் பெண் என்றும் கூறும் வேற்றுமைகளைச் சிறிதும் கவனியாமல், ஈவதே தனது கைவண்மை எனக் கொண்டுள்ளான். இவ்வளவிற்கும் அவனுடைய நாடு மழை

இல்லாத காலத்திலும் மிகுந்த பலனைப் பலவிதத்திலும் கொடுக்கும் வளப்பமுடையதா யிருக்கிறது. அப்படிப்பட்ட சிறந்த நாடும் இப்போது அவனுக்கு உரிமையாயில்லை. அதனை யும் அவன், தன்னைப்புகழ்ந்து பாடிய பரிசிலர்க்குப் பகிர்ந்து கொடுத்து விட்டான். என்னே! அவனுடைய வள்ளல் தன்மை. அவன் மனநிலையை ஆழ்ந்து நோக்கின் தானும் பாவலர்க்குப் பரிசுப் பொருளாய்ப் போவான்போல் எனக்கு விளங்கிற்று.

தவிர நான், பரிசிலாகப் பாவலர்க்கு அளிக்கப்பட்ட பறம்பு நாட்டைக் கடந்து, பாரியது மாளிகையை நோக்கிச் சென்றேன். அச்சமயம் பாரி அழகிய ஓர் சிறிய தேரின்மேல் ஏறிக்கொண்டு பூங்காவனம் புகுந்தான்; அதன் அழகைப் பார்த்துக் கொண்டு மகிழ்ச்சியோடு சுற்றி வந்தான். அங்கே ஓரிடத்தில் ஒரு முல்லைப் பூங்கொடி, கொழுக்கொம்பு இல் லாமல் காற்றால் அலைந்து கொண்டிருந்தது. பாரி அதனைக் கண்டான்; மிகவும் இரக்கங்கொண்டான்; முன்பின் ஒன் றும் யோசியாமல் உடனே தேரை விட்டுக் கீழே இறங்கி னான்; அப்பைங்கொடி யருகில் தேரை நிறுத்தினான்; கொடியை அதன்மேல் எடுத்துவிட்டான். பின்பு, அக் கொடியைப் பார்த்து, "இனிய காட்சியும், நறுமண மலரும் நல்கும் நறுங்கொடியே! இனி உனக்குக் காற்றால் ஒருவிதத் துன்பமும் நேராது. இன்பமாய் எழுந்து, வளர்ந்து, ஓங்கி உயர்ந்து, மிகச் செழிப்புடன் வாழ்வாயாக" என்று வாழ்த்தி விட்டுத் தேரில் பூட்டிய குதிரைகளை அவிழ்த்து, ஒன்றின் மேல் ஏறிக்கொண்டு ஏனையவை தன் பின்வர வீடுபோய்ச் சேர்ந்தான். ஆ! இப்படிப்பட்ட அருங்குணமுடைய வள் ளலை யான் எங்குங் கண்டிலேன். இங்ஙனம் அவன் செய்த

தால், அவனுக்குப் பகுத்தறிவு இல்லை என்று எண்ணற்க. அன்பின் பெருக்கு அப்படிப்பட்டது. அவன் மலையினது ஒரு பக்கம், இறங்கியோடும் நீர் அருவிகள் ஒலிக்கும். ஒருபக்கம் பாணர் கலத்தில் வடிக்கட்டி ஊற்றிய இனிய தேன் கற்களை அடித்துக் கொண்டு இறங்கும். மற்றும், இப்படிப் பல வளங்களையும் உடையது அவன் மலை. அதனால், அதனைக் காண்பார் யாவரும் தமதாகக் கொள்ள ஆசைப்படுவார்கள். அவ்வாறே அது, அயலாரால் அடைதற்கு எளிமையை உடையது தான். ஆனாலும், வேந்தர்கள் பலர் கூடினும், தமது வேற்படை வாட்படை முதலியவற்றால் ஒருநாளும் வெல்லமுடியாது. இணைந்த நீலமலர்போன்ற, மையுண்ட கண்களை உடைய தோழிப்பெண்ணும் பாடிவந்தால் அதனைப் பரிசர்கப் பெற்று விடுவாள். பாடலில் அவ்வளவு விருப்பம் உடையவன் பாரி. ஆகையால், நீங்கள் உங்கள் சேனைப்பலத்தாலும், படைத்திறத்தாலும், அவனை வெல்ல நினைப்பதை விட்டுவிடுங்கள். அவனுக்கு உயிர்த்தோழராய் அமைந்துள்ள கபிலர் பெருமான் கூரிய அறிவு படைத்தவர். 'புத்திமான் பலவானவான்' என்றபடி சீரிய அவருடைய அறிவு அவனுக்குத் துணையாகவும் நிற்கும். நானும் அவரைக் கண்டேன். உங்கள் எண்ணத்தை வெளியிட்டேன். அப்புலவர் பெருமான் எள்ளி நகையாடினர். பிறகு உங்கள் மனம் மாறும்படி,— "எதிர் நின்று வஞ்சிக்காமல் எதிரியைக் கொல்லும் சிறந்த படையினை உடைய நீங்கள் மூவிரும் ஒருங்கே கூடிப் போர் செய்வீராயினும், எம்மைக் கொள்ளமுடியாது. எம் நாடு முந்நூறு ஊரை உடையது. அம்முந்நூறு ஊரும் பாவலர் பெற்றனர். மலையும், மாளிகையுடன், யானும் பாரியும் இருக்கின்றனம். நீங்கள் பாடிக்கொண்டு

வரின் இவற்றையும், எம்மையும் பெறுவீர்கள். எம்மை வெல்ல இதுவே யன்றி வேறு வழியில்லை'' என்று பொருள்படும் பாடலை வரைந்து தந்தார். அது—

" கடந்தடு தானை மூவிருங் கூடி
உடன்றனி ராயினும் பறம்பு கொளற்கரிதே
முந்நூ றூர்த்தே தண்பறம்பு நன்னாடு
முந்நூ றூரும் பரிசிலர் பெற்றனர்
யாமும் பாரியும் உளமே
குன்று முண்டு நீர் பாடினிர் செலினே ''—இதுவாகும்.

ஆகையால், நீங்கள் அங்ஙனம் செய்வதே சாலச்சிறந்ததாகும்'' என்று தூதன் சொல்லிவிட்டுத் தன்னிடம் சேர்ந்தான்.

ஒற்றன் உரைத்த வண்ணமே செல்ல, மூவேந்தரும் முடிவு செய்தனர். பின்பு, பௌர்ணமியன்று மாலை, மூவரும் முதிய புலவர்போல் வேடம் பூண்டனர்; ஆளுக்கோர் யாழினைக் கையிலேந்தினர்; பாரியை அணுகினர். வள்ளல், அவர்களை அன்புடன் வரவேற்றுத் தக்க ஆதனங்களிட்டு அமர்த்தி வழக்கம்போல் நல்லுரை பல புகன்றான். அப்போது, அப் பொய்ப் புலவர்கள் சால அன்புடையார்கள்போல் நடித்துப் பாரியை மிகவும் புகழ்ந்து பாடி, அவன் உயிரையே தமக்குப் பரிசிலாகத் தரவேண்டினார்கள்.

வள்ளல் அதனைக் கேட்டதும், தன் உள்ளங் கொள்ளா மகிழ்ச்சி கொண்டு " இன்றே, நான் மனிதனாய்ப் பிறந்ததன் பயனைப் பெற்றேன்; இன்னே என்னுயிர் நுமக்குப் பரிசிலாகுக.'' என்று கூறிக்கொண்டே அவர்கள் வயமாயினன்.

பிறகு, அவர்கள் தம்மெண்ணப்படி முடித்துவிட்டு, அவன் மலையையும் மாளிகையையும் தமதாக்கிக் கொண்டார்

கள். பாரியினது பெருங் கொடைக்குணத்தை நன்குணர்ந் தன்றோ, சுந்தரமூர்த்தி சுவாமிகளும் தம் தேவாரத்தில் 'கொடுக்கிலாதானைப் பாரியே என்று கூறினும் கொடுப்பாரிலை' என்று புகழ்ந் துள்ளார்.

பொன்னைபோல் போற்றும் பெரும்புகழ் படைத்த சீரிய குணமுடைய பாரிவள்ளல் துஞ்சிய உடனே, அவ னுடன் உயிர்த்தோழராய் இருந்த கபிலர் ஆறாத் துயரமடைந் தார். அவர்,

"புணர்ச்சி பழகுதல் வேண்டா உணர்ச்சிதான்
நட்பாங் கிழமை தரும்"—

என்னும் திருக்குறளின் பெருங்கருத்தை நன்கு உணர்ந்தவ ராகையால், கோப்பெருஞ் சோழன் இறந்ததைக்கேட்டு உயிர்விட்ட பிசிராந்தையார் என்னும் புலவரைப் போலத் தாமும் உயிர்விடத் துணிந்தார். அப்போது அருகில் அழுது கொண்டிருந்த பாரியின் மகளிர், கபிலரைத் தடுத்து, "புலவர் பெருமானே!—

அற்றைத் திங்கள் அவ்வெண்ணிலவின்
எந்தையு முடையேம் எங்குன்றும் பிறர்கொளார்
இற்றைத்திங்கள் இவ்வெண்ணிலவின்
வென்றெறி முரசின் வேந்தரெங்
குன்றுங் கொண்டார் யாம் எந்தையு மிலமே

இந்நிலையில் தாங்களும் எங்களை விட்டுப் பிரிய முயற்சிப்பது தகுதியோ? எம்மன்னையும் எம்பிளமையிற் பிரிந்தார். இனித் தாங்களன்றி எங்கட்கு உறுதுணை யாவார் யாவர்?" என்று கூறிப் புலம்பினர். அதனால் கபிலர் தனது எண்ணத்தை மாற்றிக்கொண்டார். அவர் பேரறி வுடையவ ராகையால் துய

ரினை விடுத்தார்; ஆயினும் மனக்கலக்க மருதவராய் இருந்தார்; பிறகு, அப்பெண்களுக்குத் தக்க தேறுதல் கூறினார்; அவர்களுக்கு மணமுடிக்கும் வரையில் உயிருடன் இருக்க நிச்சயித்தார். பின்பு, அவர் தம் தலைவனை வஞ்சித்துக் கொன்ற மூவேந்தர்களுள் எவனுக்கும் அப்பெண்களைக் கொடுக்கக் கூடாதென நிச்சயித்துக் கொண்டு, வேறு சிற்றரசர் எவருக்கேனும் மணம் செய்துதர எண்ணி, அவர்களை யழைத்துக்கொண்டு புறப்பட்டார். அவ்வமயம் அவர் பறம்பு மலையையும், நாட்டையும் கண்டு கண்ணீர்வார,—

தேர்வழங்கும் இருப்பையுடைய உயர்ந்தோனுடைய மலையே! நம் தலைவன் இருந்த காலத்தில், நீ இங்கு நின்றோர்க்கும் தோன்றினை; உன்னைக் காணாதார்க்கும் புகழால் உயர்ந்து செவிப்புலனுகத் தோன்றினை; இப்பொழுது அவன் இறந்தமையால், பிற மலைபோலக் கட்புலனுகத் தோன்றும் அளவாயினை; முன்பு, ஊனையும், சோற்றையும் விரும்பிய பரிசே தரும் செல்வம் முதிர்ந்து எம்மோடு பல்லாண்டு நட்புச் செய்தனை; நந்தலைவன் கோல் செம்மையினால் மேகம் பெய்யாது ஒழியும் பிழையினை அறியா திருந்தனை; இனிச் சாறு கழிந்த இழிந்த கழையாயினை. அந்தோ! இந்நிலையைக் காண நேர்ந்த என் வாழ்நாள் கெடுக. பெரிய புகழினையுடைய பறம்பே! திரண்ட குறுந்தொடி யணிந்த முன் கையினையுடைய இம்மகளிரது மணம் கமழும் கரிய கூந்தலைத் தீண்டுதற் குரியவரை நினைந்து, கலங்கிச் செயலற்று நீரொழுகுங் கண்ணை யுடையேமாய்த் தொழுது, நின்னை வாழ்த்திச் செல்லுதும்." என்று பொருள்படும்படி பாடித் துயரமுற்றார். பாடிப்பாடிப் பல்கால் அழுதாலும், ஆண்டாண்டு தோறும் அழுது புரண்டாலும் மாண்டார் வருவரோ? வாரார். ஆகையால், அவர் துன்பத்தை

அடக்கிப் பெண்களுடன் புறப்பட்டுப் பறம்பு நாட்டைவிட்டு அகன்று புறம்போயினர்.

மூவேந்தர்க்கும் அடங்கிய சிற்றரசர்களுள், சிலரே பாரியின் அந்தஸ்துக்குச் சற்றேறக்குறைய தகுதியுடையவர்களாயிருந்தார்கள். அவர்களிடம் கபிலர், பாரி மகளிரை அழைத்துச் சென்று அப்பெண்களை மணந்துகொள்ளும்படி வேண்டினர். பாரி, மூவேந்தர்க்கும் பகைவனாய் இருந்தமையால் ஒருவனும்அவர்களை மணந்துகொள்ள இசையவில்லை.முடிவில்,சாலச் சீரும் சிறப்பும் பெற்றிருந்த இருங்கோ வேளிடம் சென்றார். அவன் பொன்மலைக்குத் தலைவன்; மிக்க செல்வமுடையவன்; சிறந்த போர்வீரன். ஆகையால், மூவர்க்கஞ்சாது ஒருசமயம் மணந்துகொள்வான் என்று எண்ணினர். அங்ஙனமே பெண்களுடன் அவன் முன்பு போனர். அவனும், அவர்களைக் கண்டு அன்புடன் வரவேற்றான்; வேண்டியபடி உபசரித்தான். அவ்வமயம் கபிலர், பெண்களை அவனுக்குக் காட்டி,—

“சம்பு முனிவன் வேள்வித் தழலில் தோன்றிய, செம்பாற் செய்தால் போன்ற அகன்ற உயர்ந்த மதிலை உடைய துவராபதியை நாற்பத்தொன்பது தலைமுறை வரையில் ஆண்டுவந்த வேளிர் வழிவந்த அரசனே! மாலையை யணிந்த யானையை உடைய பெரிய கோவே! பாணர்க்குதவும் பெருங் கடனுடையோய்! பொன்னுண்டாகும் பெரிய மலைக்குத் தலைவ! வெற்றிவேலைத் தாங்கும் படை வீரர் நிரம்பிய அரையர் நாட்டிற்கு அரசனே! இப்பெண்கள், பெரும்புகழ் படைத்த பாரி மகளிர். அவன் எனது உயிர்த்தோழன். ஆகையால், எனக்கும் மகளிரே யாவர் இவர்கள். நான் துறவி; கபில னென்னும் புலவன். பாரி மூவேந்தரது வஞ்சனையால் இறந்துபட்டான். இவர்கட்கோ இன்னும் மணமுடிக்கவில்லை. உனக்கு மணமுடிக்க அழைத்து வந்தேன். நீ இவர்களை மணந்து இனிது வாழ்வாயாக” என்று கூறினர்.

இங்ஙனம், கபிலர் பலவாறு வேண்டிக்கொண்டும், இருங்கோவேள் இணங்கவில்லை. அவனும் முடிவேந்தர்க்கு அஞ்சியே மறுத்துவிட்டான். எவ்வரசனும் அப்பெண்களை ஏற்றுக்கொள்ள இசையாமையால், கபிலர் மிகவும் வருந்தினர். என் செய்வார் பாவம்? பாரிப் பிரிவினும் பெருந்துய ரடைந்தார். மூவேந்தர் மீதும், அடங்காக் கோபம் கொண்டார்; அவ்வரசனைப் பார்த்துப் புலவர் ஒருவரை வெறுத்ததால் கேடடைந்த, அவனது முன்னோன், ஒருவன் செயலை எடுத்துக் காட்டிப் புறம்போந்து, தமக்குத் தெரிந்த ஓர் பார்ப்பனரிடம் அப்பெண்களை ஒப்படைத்துவிட்டு மிக்க துயரமுடன் வட வனஞ் சென்றார்.

அங்கே பாரியை எண்ணி எண்ணித் துக்க மீக்கூர வாய்விட்டரற்றி "ஓ! பெரிய வண்மையை உடைய பாரியே!! நீயும் நானும் கலந்த நட்பிற்குப் பொருந்த ஒழுகாமல் நீ என்னை ஈண்டுத் தவிர்த்து, வெறுத்தனையே? பெருமை தக்க தலைமையினை உடைய நட்பிற்கு யானும் நின்னோடு கூடத் தொடர்தலே தகுதி யன்றோ? நீயும் நானும் கூடி யிருந்த ஆண்டுகள் பலவாயிருந்தும், நான் உனக்குப் பொருந்தா நட்பினன் ஆயினனோ? இப்பிறப்பில் பொருந்திலேனாயினும் மறுபிறப்பிலேனும் இனிய காட்சியினை உடைய உன்னோடு இடைவிடாமற் பொருந்தக் கூடி வாழ்தலை உயர்ந்த விதி கூட்டுவதாக" என்றழுதனர்; பின்பு தவமேற்கொண்டார்.

பாரியினது கதியை அறிந்த ஔவையார் பெரிதும் வருந்தி, அவன் மகளிரை அழைத்து வந்து, மலையமான் தெய்வீகனுக்குத் திருமணமுடித்தனர். அப்பெண்களும், ஔயாரை மனமாரப் போற்றி, அன்பும் இன்பமும் பெருக, மிக மகிழ்ச்சியுடன் வாழ்ந்து விளங்கினார்கள்.

மங்களம் ஓங்குக.

---

PRINTED AT THE B. N. PRESS, MOUNT ROAD, MADRAS.